# சிவாஜி சகாப்தம் முடிந்துவிட்டதா?

### டைரக்டர் விஜயன் பேசுகிறார்!



தமிழ்த் திரைப்பட உலகிலே சிவாஜிக்கு ஒரு தனி இடம் உண்டு. ஹி ஈஸ் எ கிரேட் ஆர்ட்டிஸ்ட். அவர் இடத்தை யாரும் நிரப்புவது கஷ்டம். நான் அவருக்குப் பல படங்கள் டைரக்ட் செய்துள்ளேன். இவையெல்லாம் ஒரு பக்கம் இருந்தாலும் நான் சௌகார் ஜானகி கட்சிதான்!

சிவாஜிக்கு அண்ணனாக, தந்தையாக நடிக்க சரியான ஆட்களைத்தான் பெரும்பாலும் போடுவார்கள். சில படங்களில் அது அமையவில்லை என்றால் அவர் வருத்தப்படுவார். 'இமேஜ்' இல்லாத ஆர்ட்டிஸ்டை அவர் விரும்புவதில்லை. எனவே புது முகங்களை அவர் படத்தில் அறிமுகப்படுத்துவது அபூர்வம்.

அவர் தமது வயதுக்குத் தக்க கதாபாத்திரங்களை ஏற்பது நல்லது. சமீபத்திய அவர் படங்களைப் பார்க்கும்போது இதைச் சொல்லத் தோன்றுகிறது. பிரஸ்டிஜ் பத்மநாபன், சௌத்ரி போன்ற கண்ணியமான அவரது நடிப்புக்குச் சவால் விடுகிற கதாபாத்திரங்களை ஏற்று நடித்தால்தான் பெருமை. அதை விட்டு விட்டு, தர்மராஜா, ரத்தபாசம் போன்ற படங்களில் வரும் கேரக்டர்களைச் செய்ய ஒரு சிவாஜி தேவையில்லை. அவை இளைஞர்களுக்கான கதாபாத்திரங்கள். அவற்றை இளைஞர்கள் செய்தால்தான் நன்றாக இருக்கும்.

அவர் நடிக்கும் படங்களில் அவர் டூயட் பாடி, காதல் செய்யவே வேண்டாம். இதை ஜீரணிப்பதே கஷ்டமாக இருக்கிறது. பாடினால்தான் அவர் நடிப்பு சிறக்குமா என்ன?



அடுத்த அவிட்டம்மேக்-அப். அவர் எல்லாப் படங்களிலும் (சில கதாபாத்திரங்களைத் தவிர) இயற்கை முடியுடன் விக் உபயோகிக்காமல் நடித்தாலே நன்றாக இருக்கும். அவர் காதல் காட்சியில் நடித்தாலே தியேட்டரில் எல்லோரும் கிண்டல் செய்கிறார்கள். அது அவருக்கு எதற்கு? இருபது வயதுப் பையனாக மனத்தில் நினைத்துக்கொண்டு செய்யும் மேக்-அப், நடை, உடை, பாவனைகள் அவர் இமேஜையே கெடுக்கின்றன.



அடுத்த குறை ஓவர் ஆக்டிங். சாதாரணமாகச் செய்ய வேண்டிய நடிப்பைக் கூட சற்று மிகைப்படுத்தியே செய்கிறார். ஒரு கால கட்டத்தில் இது ஓகோ என வரவேற்கப் பட்டது. ஆனால் இன்று காலம் மாறிவிட்டது. நடிப்புக் கலையின் இலக்கிய இலக்கணங்கள் மாறிவிட்டன. படத்தில் பல இடங்களில் தேவையில்லாமல் பெரிதாக வசனம் பேசுவதையும் அவர் விட்டுவிட வேண்டும்.

அவருக்கு அமைகிற சினிமா வசன கர்த்தாக்கள் சரியில்லை. இது அவருக்கு ஒரு வீக் பாய்ண்ட். இதனால் பல குப்பைகள், வசனங்கள் என்று வந்துள்ளன. இதுவும் அவர் இமேஜைப் பாதிக்கிறது.

சிவாஜி உடை விஷயத்தில் கவனம் தேவை. ஸ்கார்ஃப் அணிவது, கதாபாத்திரத்துக்குத் தேவையில்லாத கோட் போடுவது, முதலியவற்றை நிறுத்த வேண்டும்.

தமிழிலும், தெலுங்குப் பட உலகிலும் பொதுவாக நடிகர்கள் கத்திப் பேசுகிறார்கள். சிவாஜி இப்படிப் பேசும்போது மற்ற நடிகர்கள் செவிடா என்று கேட்கத் தோன்றும்.

பாடல்களும் குறைய வேண்டும். துக்கமோ, அல்லது கவலையோ பாடினால்தான் வெளிப்படுமா என்ன?

இனி ப்ளே பாய் வேடங்கள் ஏற்காமல், அவர் வயதுக்குத் தக்கபடி பாத்திரங்கள் ஏற்க வேணும். எனக்கு அவர் மீது எந்தவித மனத்தாங்கலும் இல்லை. அவரது ஒப்பற்ற நடிப்பின் ரசிகன் என்ற முறையில் தான் இதைச் சொல்கிறேன். மீண்டும் கூறுகிறேன் அவரை நடிப்பில் மிஞ்ச இனிதான் ஒருவர் பிறக்கவேண்டும்!

பேட்டி: ''**சிக்கி**''

## நவசக்தி நிலையத்தாரின்
## உன்னதத் தயாரிப்பு!



### திருஷ்டி நிவர்த்தி யந்திரம் - (ரூ. 42)
### திருஷ்டி நிவர்த்தி டாலர் - (ரூ. 35)

(மும்மூர்த்தி அம்சம் கொண்டது)
(பூஜையில் வைத்தது)

- லாரி, கார், ஸ்கூட்டர் ஆகிய வாகனங்களின் விபத்துக்களைத் தடுக்க —
- கறவைப் பசுக்கள் கறவை குறையாமல் பலன் தர —
- வீடு, தொழிற்சாலை, மற்றும் வியாபார ஸ்தலங்கள் செல்வமுடன் விருத்தியடைய —
- கண் திருஷ்டியால் ஏற்படும் உடல் உபாதைகள் வராமலிருக்க —

உறுதுணையாக இருக்கும் சக்திமிக்க சாதனம்!
தபாலில் பெற 25% முன்பணமனுப்பி வி.பி.பி.யில் பெறலாம். விரிவான கேட்லாக்கு பெற 25பை தபால் தலையுடன் எழுதவும்.

**நவசக்தி நிலையம்**
153, லாயிட்ஸ் ரோடு, கோபாலபுரம்,
சென்னை-600 086. (போன்: 812013)

---

SPECIALISTS IN

**Quartz, Electronic, Omega, Rolex, Rado, Seiko, Citizen, HMT, Etc**




**Sri Jagadeswari Electronic Service Centre**

17, Ramanathan Street,
T. Nagar, Madras-600 017
(Near Mambalam Railway Station)

---

**QUALITY JEWELLERY**
COURTEOUS SERVICE
**PLEASE VISIT**

# G. R. THANGA MALIGAI

## JEWELLERY

AIR-CONDITIONED SHOW ROOM

**104 USMAN ROAD T'NAGAR MADRAS-17**

**FOR YOUR REQUIREMENTS OF**

GUARANTEED QUALITY

**DIAMONDS**
**GOLD JEWELS**
**BIRTH STONES**
**GIFT NOVELTIES**

**JOIN OUR JEWELLERY SAVINGS CUM BENEFIT SCHEME**

PHONE : **445062**



# உணர்ச்சிகள், கமலைப் பற்றிய உணர்ச்சிகள்!

கமலை நான் எப்பொழுது முதலில் சந்தித்தேன் என்று எனக்கே ஞாபகமில்லை. அன்னை வேளாங்கண்ணி படப்பிடிப்பில் துருதுருவென்று விளாப்பும் கையுமாக ஓடிக்கொண்டிருப்பார். அடுத்து நான் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டு ''குறத்தி மகன்'' படம் பார்க்கச் சென்றேன். அவரது ஒவ்வொரு அசைவிலுமே ஒரு தாளகதி இருந்தது. அதன் பின் நான் கமலைப் பார்த்தது ''சொல்லத்தான் நினைக்கிறேன்'' கடைசிக் காட்சி எடுக்கும்போதுதான். அதுவும் வில்லனாக. படம் பார்த்தபோது வருத்தமாகவே இருந்தது. இவ்வளவு நன்றாக வில்லன் ரோலை நடித்துவிட்டாரே இவரை வில்லனாகவே ஆக்கி முத்திரை குத்திவிடப் போகிறார்களே என்று. ஆனால் வெகு அழகாக அந்த வலையிலிருந்து தப்பினார். அடுத்து நாங்கள் சந்தித்தது ''அபூர்வ ராகங்கள்'' படப்பிடிப்பில். அன்று படத் துறையில் இருந்த பெரிய நடிகைகள் எல்லாம் முடியாது என்று சொன்ன அந்தக் கதாபாத்திரத்தை நான் ஒப்புக்கொண்டு ஒரு சவாலாக ஏற்று செட்டுக்குள் நுழைந்தேன். அங்கே கமல் என்னைப் போலவே துடிப்புடன் இருந்தார்.

முதன் முறையாக என் வாழ்க்கையில் நான் பயப்பட்டேன். அந்தப் பயம் கேமராவைப் பார்த்ததாலோ அல்லது இயக்குனரைப் பார்த்ததாலோ அல்ல. அங்கு கமலைப் பார்த்ததால். அவரது நடிப்பாற்றலை உணர்ந்திருந்ததால்! எந்நேரமும் அவர் விழிப்புடன் இருக்கிறார் என்று என்னுள் ஏதோ ஒன்று சொல்லிக் கொண்டேயிருந்தது. எனக்குள்ளேயே ஒரு பயம் — இரண்டு மூன்று ஒத்திகைகளுக்குப் பிறகு நம் நடிப்புச் சரியில்லை என்று அனுப்பி விடுவார்களோ?

இயக்குனர் எள் என்றால் நாங்கள் எண்ணெயாக நிற்க முயன்றோம். என்னைப் பொறுத்தவரை நான் அந்தப் படத்தில் கமலிடம் நிறையக் கற்றுக் கொண்டேன். கண்ணை எடுக்காமல் கமலைப் பார்த்து அவரது ஒரு முகபாவத்தைக் கூட விடாமல் கவனித்து அதற்கு ஒரு படிகூடக் குறையாமல் நான் என் கதாபாத்திரத்தைச் சிறப்பாக உருவாக்க முயன்றேன். இதற்காகப் படம் முடியும்வரை நான் எடுத்துக்கொண்ட சிரமம் எனக்குத்தான் தெரியும். அது ஒரு ஆரோக்கியமான போட்டா போட்டி. இயக்குனரிடமிருந்து 'குட்' என்ற ஒரு வார்த்தை வாங்குவதற்கு நாங்கள் அத்தனை பாடுபடுவோம். ''அபூர்வ ராகங்கள்'' படம் வெளிவருவதற்கு முன் என்னை யாரெல்லாம் கேலி செய்தார்களோ அவர்கள் வாயெல்லாம் அடைத்துப் போக நான் என் காலைத் தமிழ்ப் பட உலகில் ஆழமாகப் பதித்து விட்டதாக நினைத்தேன்.



**சிந்தனைச் சிதறல்கள்**

— ஸ்ரீவித்யா

ஆனால் அவ்வாறு நடக்கவில்லை. திறமை இருந்தும் என்னால் இந்தத் தமிழ்ப் பட உலகில் ஒரு நிலையான ஸ்தானத்தைப் பெற முடியவில்லையே என்ற குறை நான் சாகும் வரை எனக்கு இருக்கும். ஆனால் கமலிடம் நட்புரிமை பாராட்டுகிறவள் என்ற முறையில் நான் அவரது வெற்றியைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். நாங்கள் கடைசியாக நடித்த மற்றொரு தமிழ்ப் படம் ''உணர்ச்சிகள்.'' அபூர்வ ராகங்களை விட இந்தப் படம் ஒரு படி அதிகம் சிறப்புடையது. ஆனால் நானும் கமலும் சேர்ந்து நடிப்பது போல் வித்தியாசமான படங்கள் ஏன் தொடர்ந்து வரவில்லை என்பது ஆண்டவனுக்கே வெளிச்சம். கே. பாலசந்தர் கூட ஏன் அப்படி ஒரு முயற்சி எடுக்கவில்லை என்பது எனக்குள் இன்றுவரை ஒரு கேள்வியாகவே இருந்து வருகிறது.



''எங்கடா... நம்ம டைப்பிஸ்ட் ரோகிணி சீட்லே இருக்க மாட்டேங்கிறா...!''
''உனக்குத் தெரியாதா.... மேனேஜர் பூமிநாதனை சுற்றிக் கொண்டிருக்கா.!''

சாமி அய்யா

இன்று கமல் பெரிய ஸ்டார், சுடர் விடுகின்ற நட்சத்திரம். கமலும் நானும் திறமையில் ஒருவருக்கொருவர் எந்த விதத்திலும் சளைத்தவர்கள் அல்ல. இன்று நான் அவரை விடப் பெரிய ஸ்டார் ஆகவில்லை என்றாலும் என் எல்லைகளைச் சோதிக்க மலையாளப் பட உலகைப் பிடித்து விட்டேன். அவர்கள் இன்று எனக்குக் கொடுக்கும் விதம் விதமான பாத்திரங்களில் பத்தில் ஒரு பங்கு அன்று எனக்குத் தமிழில் கிடைத்திருந்தால் தமிழ்த் திரை உலகில் என் நிலைமையே வேறாக இருந்திருக்கும்.

சமீபத்தில் கதை இலாகா ஒன்று கமலுக்காகவென்றே தொடங்கப்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதாவது கமல் நடிக்கவிருக்கும் எந்தப் படத்தின் கதையையும் இந்த இலாகா அலசி ஆராயும். கமலுக்கு ஏற்றதா என்று பார்த்து இல்லை என்று தோன்றினால் மாற்றும்! அதற்குட்பட்டுத் தான் படாதிபதிகளும் டைரக்டர்களும் நடந்து கொள்ள வேண்டும்! இதைக் கேள்விப்பட்டவுடன் என் மனத்தில் சொல்ல முடியாத ஒரு வருத்தம். கமல் அன்று போலவே இன்றும் எளிமையாகவும் தனியாகவும் செயல்பட்டால் நமக்கு பதினாறு வயதினிலே, சிவப்பு ரோஜாக்கள் போன்ற எத்தனையோ புதிய புதிய படைப்புக்கள் கிடைக்கும்.

என்னைப் பற்றி கமல் குமுதத்தில் எழுதியிருந்தார். முதல் வாரம் புகழ்ந்திருந்தாலும் அதற்கு அடுத்த இதழில் 'சரியான சான்ஸ் கிடைக்காததால் ஸ்ரீவித்யா மனம் வெறுத்து நொந்து போயிருக்கிறார்' என்று என்னென்னவோ எழுதியிருந்தார். இதைப் படிக்கும் பொழுது நான் தொடர்ந்து 18 மலையாளப் படங்களில் நடித்துக் கொண்டிருந்தேன். இப்படிப்பட்ட அர்த்தமற்ற வாக்கியங்கள் கமலிடமிருந்தா வந்தன? அதுவும் என்னைப் பற்றி? என்று இதற்குத் தான் மனம் வருந்தினேன். அதுவும் அவருக்காக வருந்தினேன்.

ஒரு நடிகனோ நடிகையோ தன்னைச் சுற்றி யார் யார் இருக்கிறார்கள், என்ன வெல்லாம் நடக்கிறது என்பதை உணர்வதை விட்டு, தன்னை மட்டும் கண்ணாடியில் பார்த்து ரசித்துக் கொண்டு தன்னைச் சுற்றி ஒரு வேலியைப் போட்டுக் கொள்ளக் கூடாது. இதைப் படிக்கும் போது கமல் என்னை நினைப்பார் என்று எனக்குத் தெரியும். 'வித்யா கூடவா இப்படி எழுதுகிறார் என்னைப்பற்றி' என்று எண்ணலாம். நானும் அப்படித்தான் கமலைப் பற்றி நினைத்தேன், அன்று குமுதத்தைப் படித்த போது!

பலமுறை அவர் வீட்டுக்குப் போனபோதிலும் ஒருமுறை கூட எனக்கு சான்ஸ் வாங்கிக் கொடுங்கள் என்று நான் முணுமுணுத்ததும் கிடையாது. ஆடு புலி ஆட்டம், மற்றும் டி. என். பாலுவின் படம் எல்லாம் என்னால் மறுக்கப்பட்டவையே. நான் கமலுக்கு எந்த விதத்திலும் நடிப்பில் சளைத்தவள் அல்ல என்று எனக்குத் தெரியும். அப்படி இருக்கும்போது அவருக்குப் பின் பாட்டுப் பாடும் ஒரு வேடத்தை நான் ஏன் ஏற்க வேண்டும்? அபூர்வ ராகங்களைப் போலவோ, உணர்ச்சிகளைப் போலவோ ஒரு நல்ல வேடத்தில் அவரோடு நடிக்கக் காத்திருக்கிறேன்.

சமீப காலமாகக் கல்யாண ராமனுக்குப் பிறகு அவருக்கு ஏற்பட்டிருக்கும் இறக்கத்திற்கு யார் காரணம் என்று எனக்குத் தெரியவில்லை. யார் காரணம் என்பதை விட எவை எவை காரணம் என்று அலசிப் பார்த்து அவற்றைத் தவிர்ப்பது நல்லது. சிவாஜி அவர்களுக்குப் பிறகு சினிமாவில் அடி எடுத்து வைத்தவுடனேயே இத்தனை விதமான பாத்திரங்களை வேறு யாருமே செய்ததில்லை. ஆனால் 'மார்க்கெட்' நிலைக்க வேண்டுமே என்பதற்காக அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலவற்றில் தவறுகள் இருக்கின்றன. நான் அவருக்கு அறிவுரை சொல்பவளல்ல. ஆனால் என்னைப் பற்றி எழுதக் கமலுக்கு எவ்வளவு உரிமை இருந்ததோ அந்த அளவுக்கு எனக்கும் இருக்கிறது. நான் கூறுவதெல்லாம் உதட்டளவில் அல்ல; உள்ளத்திலிருந்து வரும் சொற்கள் என்று யாருக்குப் புரியவில்லை என்றாலும் கமலுக்கு நிச்சயமாகப் புரியும் என்று நான் நம்புகிறேன். மறுபடியும் அவர் பழைய கமலாக மாறிச் சாதனைகள் புரிய வேண்டுமென்று அவருடைய ரசிகை என்ற முறையில் அவரைக் கேட்டுக் கொள்கிறேன்; வாழ்த்துகிறேன்.

பேட்டி: சவன்

# கவர்னரின் பணி கொட்டாவி தானா?



கவர்னர்கள் பதவியைப்பற்றிச் சமீபத்தில் மத்திய உள் துறை அமைச்சர் திரு ஜெயில் சிங் ''ஒரு வேலையுமின்றி கொட்டாவி விட்டபடி சோம்பியிருக்கும் பதவி'' என்று பரிகாசமாகக் குறிப்பிட்டார். இதைப் பற்றிப் பலர் வருத்தமும் சிலர் கோபமும் கொண்டுள்ளனர். நிர்வாகத் துறையில் நீண்ட அனுபவம் பெற்ற முன்னாள் மத்திய அமைச்சர் திரு சி. சுப்பிரமணியம் அவர்களை அணுகி, ஜெயில் சிங் கூறியிருப்பதைப் பற்றி அவர் கருத்தைக் கேட்டபோது ''ராஜாஜி சொன்னதைத் தான் சொல்ல வேண்டும்'' என்று கூறி விளக்கம் தந்தார்:

ஸ்ரீ ஜெயில் சிங் போன்ற ஒருவர் ராஜாஜியிடம் பேசிக் கொண்டிருந்தபோது.' 'இந்த கவர்னர்களுக்கு என்ன வேலை? சாப்பிட்டு விட்டுத் தூங்குவதைத் தவிர'' என்று குறிப்பிட்டார்.



ராஜாஜி அந்த நண்பரைப் பார்த்து, ''தீயணைக்கும் நிலையங்களைப் பார்த்திருக்கிறீர்களா? ரொம்பவும் விலையுயர்ந்த இயந்திரங்கள் அங்கு சும்மா தூங்கிக்கொண்டு தான் இருக்கும். எங்காகிலும் நெருப்புப் பிடித்துவிட்டால் இந்த இயந்திரங்களின்றி சமாளிக்க முடியாது. அப்படியே நெருக்கடி ஏற்படும் காலத்தில் கவர்னர்களின்றி நிலைமையைச் சமாளிக்க முடியாது. இது ஓரளவு குடியரசுத் தலைவர் பதவிக்கும் பொருந்துவது. ஆழமாக எதையும் கவனிக்கத் தெரியாதவர்களுக்கு உண்மை புலப்படாது'' என்றார்.

—எஸ். வி. எஸ்.

# கராத்தே பயிற்சி-1

சித்திரம்: [signature]

தயாரிப்பு: குன்றுமணி

பயிற்சியாளர்: டோனி பொன்னையா

## முதலில் மரியாதை



இரண்டு கால்களையும் ஒன்றாகச் சேர்த்து வைத்து, கைகளைப் பக்கவாட்டில் வைத்து, உடலை வளைத்து வணங்க வேண்டும்.




## கைகளை மடக்கப் பழகுதல்



முதலில் கைகளைத் திறந்தபடி வைத்துக் கொள்ளுங்கள்!

பிறகு விரல்களை மட்டும் மடக்குங்கள்.

விரல்கள் மீது கட்டை விரலை வைத்து முஷ்டி போல் வைத்துக் கொள்ள வேண்டும்.

## நிற்கப் பழகுதல்

கால்கள் இரண்டையும் விலக்கி வைத்து, கை முஷ்டியை மடக்கி நீட்டி, நிற்கப்பழக வேண்டும். இதன் பிறகு வலது காலைப் பின்னால் வைத்து, இடது முஷ்டியை மடக்கி முன்னால் இடையைத் தொட்டிருப்பதுபோல் வைத்து, வலது முஷ்டியை மடக்கி, குத்தவும் உதைக்கவும் தயாராக இருக்க வேண்டும்.







உயிர்காக்கும் மருந்துகளின் விலை ஏற்றத்திற்கு மத்திய அரசு அனுமதி வழங்கப் போகிறது!






# செய்திகள் வாசிப்பது செம்பியன்

குஷ்வந்த் சிங் குஷியான சிங். இன்று ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியராக விளங்கும் அவர் பிரதமரைக் குஷிப்படுத்த எண்ணியுள்ளார் என்பது தெரிகிறது.

இல்லையெனில், ஜஸ்டிஸ் பகவதியின்மாறுபட்ட தீர்ப்பை ஐந்து பத்தி தலைப்பில் மேலே பிரசுரித்துவிட்டு, ஸுப்ரீம் கோர்ட்டின் பெரும்பான்மைத் தீர்ப்பை சிறிய தலைப்பில் பிரசுரிப்பாரா? (ஆகஸ்டு 2, 1980 இதழ்)

''அரசியல் சாசனத்தின் வழிகாட்டும் கொள்கைகள் மக்களின் அடிப்படை உரிமைகளைப் பறிக்க முடியாது'' என்பது பெரும்பான்மைத் தீர்ப்பு. ''பறிக்கலாம், தவறில்லை'' என்பது பகவதியின் மாறுபட்ட தீர்ப்பு. நடைமுறையில் செல்லுபடியாகாத சிறுபான்மைத் தீர்ப்புக்கு முதலிடம் தந்து பிரதமரைக் குஷிப்படுத்தலாம். ஆனால் அது பத்திரிகை தர்மம் ஆகாது.

நாளிதழ் ஆசிரியர் தலையங்கத்தில் அல்லது கட்டுரையில் தமது கருத்தை எழுதலாம். ஆனால் செய்திகளை விருப்பு வெறுப்பின்றித் தரவேண்டும்.

● ● ●

● ''முதன் முதலாக புற்று நோய்க்கு ஒரு மருந்தை எமது ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துவிட்டார்கள்'' என்று மார்தட்டிக் கொண்டார் மகாராஷ்டிர முதல்வர் அன்டுலே.

''அதெல்லாம் ஒன்றுமில்லை, வெகு காலம் முன்பே இங்கு பல ரக புற்று நோய்களுக்குப் பலவித மருந்துகளைத் தமிழக ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்; அதுபற்றி நாளிதழ்களுக்குச் செய்தி வெளியிடவில்லை, மருத்துவப் பத்திரிகைகளுக்கு மட்டுமே தகவல் தந்தோம்'' என்று பதில் சொல்லியுள்ளனர் சென்னை அடையாறு புற்று நோய் நிலைய இயக்குனர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தியும், டாக்டர் சாந்தாவும்.

அடக்கமாக இருப்பதில் கூட ஆபத்து உண்டு என்று இதிலிருந்து தெரிகிறது அல்லவா? ''அடக்கம் ஏமாற்றம் தரும்'' என்று குறள் எழுதலாம்!

● ● ●

● மொரார்ஜிக்கு காந்தி, ஜெகஜீவனுக்கு சுரேஷ், இந்திராவுக்கு சஞ்சய், கார்ட்டருக்கு பில்லி!

தலைவருக்கு உயர்ந்தால் தலை வலியும் உறவினர் வடிவில் கூடவே வரும்போலும்!



லிபியா அரசிடமிருந்து 220,000 டாலர் ''கடன்'' பெற்றுக் கொண்டாராம் பில்லி கார்ட்டர் — அமெரிக்க ஜனாதிபதியின் சகோதரர். ஜனாதிபதி தேர்தலில் கார்ட்டரின் வெற்றி வாய்ப்புக்களை இது வெகுவாகப் பாதித்திருக்கிறது. ''காரணம் இல்லாமலா இப்படிக் ''கடன்'' கொடுப்பார்கள்?'' என்று அமெரிக்க மக்கள் கேட்கிறார்கள். ஜிம்மி கார்ட்டர் இதில் தமக்குச் சம்பந்தமே கிடையாது என்று கூறுவதைக் கேட்டுச் சிலர் நம்புகிறார்கள், பலர் நகைக்கிறார்கள்.

நண்பர்களையோ உறவினர்களையோ கிட்டத்தில் நெருங்க விட மாட்டார் ராஜாஜி. கல் நெஞ்சர் என்றுகூடப் பெயரெடுத்தார். ''இப்படி ஏதாவது அவதாறில் மாட்டிக் கொள்வதை விடக் கல்நெஞ்சர் என்ற பட்டமே தேவலாம்'' என்று அவர் எண்ணியிருக்க வேண்டும். ''என் உறவினர் பலர் நியாயமாய் அடைந்திருக்கக் கூடிய முன்னேற்றங்களைக்கூட என்னுடைய கடுமை, கண்டிப்பு காரணமாக அடைய முடியாமல் போய்விட்டது'' என்று அவர் வருந்தியதுண்டு.

● ● ●

● லோகசபை ஒருவினாடி நேரம் கூடுவதற்கு நீங்களும் நானும் அழும் தொகை ஆயிரம் ரூபாய்! அருண் ஷௌரி கணக்கிட்டு எக்ஸ்பிரஸில் எழுதியுள்ளார். நான் கணக்கில் மாதக் கணக்கில் நாடாளு மன்றம் கூட மக்களின் வரிப் பணம் எவ்வளவு செலவாகும்!

நமக்காகிற செலவுக்குப் பிரதிபலனை நாம் அடைய வேண்டாமா? எனவேதான் சின்னத்தை மட்டும் பாராமல் வேட்பாளரின் சிறப்பையும் பார்க்க வேண்டும் என்பது.



1980 ஆகஸ்டு 17
ரௌத்திரி ஆவணி 1
மலர்: 39 இதழ்: 3

கல்கி



கண்ணுக்குத் தெரியாத பண நஷ்டங்களைப் பற்றி நாம் கவலைப்படுவதே இடையாது. கத்தரிக்காய் அழுகலில்லாது இருக்கிறதா என்று பார்த்துப் பார்த்து வாங்கும் நாம் வேட்பாளரின் அறிவாற்றலைப் பற்றி யோசிப்பதே இல்லையே!

● ● ●

● இந்த வாரம் அருள்வாக்கு பகுதியில் காஞ்சி முனிவரின் கருத்துரையை வடமொழியை விரட்ட எண்ணுவோர் மட்டுமின்றி மந்திர உச்சாடனத்தை ஜீவனோபாயமாகக் கொண்டவர்களும் ஆழ்ந்து படித்துப் பயன்பெற வேண்டும்.

கோவில்களில் ஜெட் வேகத்தில் அர்ச்சனைகளை முடிப்பவரும் வீட்டில் சூப்பர்ஸானிக் வேகத்தில் தர்ப்பண மந்திரத்தைக் கூறுபவரும் யாருக்கு என்ன நன்மை செய்கிறார்கள்?

செய்கிற தொழில் எதுவானாலும் பெருமிதமும் அதில் மனப்பூர்வமான ஈடுபாடும் கொண்டு திருந்தச் செய்யும்போதுதான் மதிக்கப்படுவோம்.

● ● ●

● ஐந்து நக்ஸலைட்டுகளைப் பிடித்துக்கொண்டு காரில் வந்த போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரு




கான்ஸ்டபிள்களும் வெடிகுண்டுக்குப் பலியானது துயரச் செய்தி. குண்டு கார் மீது வீசப்பட்டதா அல்லது காரில் இருந்த நக்ஸலைட்டுகளிடமே இருந்ததா என்பது தெரியவில்லை. பின்னது உண்மையாயின் காரில் ஏறுகின்ற நக்ஸலைட்டுகளைச் சோதனையிடத் தவறி, போலீஸ் அதிகாரி சாவைத் தாமே தருவித்துக் கொண்டார் எனலாம். நக்ஸலைட்டுகள் தங்கள் உயிரை ஒரு பொருட்டாக எண்ணாதவர்கள். இந்தச் சம்பவத்தில் அவர்களில் மூவர் இறந்திருக்கிறார்கள்.

நம்முடைய பாதுகாப்பை முன்னிட்டுக் கடமையாற்றுகையில் வீர மரணம் அடைந்த இன்ஸ்பெக்டருக்கும் கான்ஸ்டபிள்களுக்கும் அஞ்சலி.

● ● ●

● சாத்தேக்குப் பொழுது போகவில்லையென்றால் சினிமாவில் முத்தக் காட்சிப் பிரச்னைக்கு வந்துவிடுவார்! நாடாளு மன்றத்தில் கலகலப்புத் தோன்றும்! ''சும்மா உதட்டளவில் பேசுகிறீர்கள்!'' என்று ஓர் உறுப்பினர் சாட, ''இல்லை, உள்ளத்திலிருந்தே பேசுகிறேன்! முத்தக் காட்சியை அனுமதித்தால் என்ன தவறு?'' என்று கேட்டிருக்கிறார் தகவல், ஒலி பரப்பு மந்திரி வஸந்த் சாத்தே.

இந்த நல்ல செய்தியைக் கூறியதற்காக சினிமா நட்சத்திரங்களும் படாதிபதிகளும் சாத்தேக்கு முத்த மழை பொழிந்து கொண்டிருப்பார்கள் — உதட்டளவில் அல்ல, உள்ளத்தளவில்!

● ● ●

● ''தி.மு.க.வுடன் சேர்ந்ததால்தான் இந்திரா காங்கிரஸ் தோற்றது'' என்று சமீபத்தில் தமிழக சட்ட மன்றத் தேர்தலை விமர்சித்திருக்கிறார் அன்டுலே. ''நான்தான் அப்பவே சொன்னேனே — ஒரு வருஷம் முன்பாகவே'' என்று இடித்துக் காட்டிவிட்டார் நெடுமாறன். அன்டுலே, நாடாளு மன்றத் தேர்தலை மறந்துவிட்டுப் பேசுகிறாரோ என்று யாரும் எண்ண வேண்டாம். அது பற்றிக் கேட்டால், ''இந்திரா காங்கிரஸுடன் சேர்ந்ததால்தான் தி.மு.க. வென்றது'' என்று கூறுவார் அன்டுலே! அவருக்குத் தெரியாதா எதை எப்படி எப்போது பேச வேண்டுமென்று!

● ● ●

● அடுத்த ஒலிம்பிக்ஸ் எங்கு நடக்குமோ அந்தத் தேசத்தின் கொடியை ஒலிம்பிக்ஸ் கடைசி நாளன்று பறக்க விடுவதுவழக்கம். அமெரிக்கா தன் தேசக் கொடியைப் பறக்க விடக் கூடாது என்று கூறிவிட்டது. அடுத்த ஒலிம்பிக்ஸ் அமெரிக்க நகரான லாஸ் ஏன்ஜெலஸில்தான் நடக்கவிருக்கிறது என்பதால் அந்த நகரின் கொடியைக் கடைசி தினத்தன்று பறக்க விட்டுச் சமாளித்தார்கள்!

× ருஷியான சிங்

அமெரிக்கா இந்த ஒலிம்பிக்ஸைப் பகிஷ்கரித்ததற்கு ஏட்டிக்குப் போட்டியாக அமெரிக்க ஒலிம்பிக்ஸை ருஷ்யா பகிஷ்கரிக்கும் என்று உலகமே எதிர்பார்த்தது. ''பகிஷ்கரிக்க மாட்டோம்'' என்று ருஷ்யத் தலைவர்கள் கூறி உலகின் நன்மதிப்பைப்பெற்று விட்டனர். அமெரிக்காவிலேயே அமெரிக்க விளையாட்டு வீரர்களைத் தோற்கடிக்கும் ஆர்வத்துடன் ருஷ்ய வீரர்கள் காத்திருக்கின்றனர். எந்த அளவுக்கு அதில் வெற்றி பெறுவார்களோ, என்னமோ, முதல் படியாக இன்றே ராஜதந்திரத்தில் ருஷ்யா வென்று விட்டது!

● ● ●

● அன்டுலே மகாராஷ்டிரத்தில் இரவு நேரத்தில் மாறு வேடத்தில் நகர் வலம் வந்தாலும் வந்தார், நமது அமைச்சர்களுக்கும் ஆசை வந்து விட்டது! போட்டி போட்டுக் கொண்டு பால் டிப்போக்களுக்கும் வேலை வாய்ப்புப் பரிவர்த்தனை நிலையத்துக்கும் திடீர் விஜயம் செய்துள்ளனர். அமைச்சர்களின் இந்தத் திடீர் விஜயம் காரணமாக திடீரென்று நிலைமைகளில் அபிவிருத்தி ஏற்பட்டு விடும் என்று நாம் எதிர்பார்த்தால் திடீரென்று நாம் முட்டாள்களாகிவிட்டதாகும்!

# உசிலையாரின் 'கிடுகிடு' போராட்டம்!



திரு. உசிலைமணி

**மக்களைப் பாதிக்கும் பிரச்னையில் நிதானப் போக்கைக் கடைப்பிடிக்க நடிகர் 'ஜெமினி' யோசனை !**

சென்னை, ஆகஸ்டு 15—

பிரபல நகைச்சுவை நடிகரும், கா. சா. கழகத்தின் நிரந்தரத் தலைவருமான திரு. உசிலைமணி, சென்னை மற்றும் தமிழ் நாடெங்குமுள்ள ஹோட்டல்களுக்கு எதிராக ஒரு 'கிடுகிடு' போராட்டத்தை அறிவித்துள்ளார். கா. சா. கழக உறுப்பினர்களின் ஜீவாதார உரிமையினைப் பறிக்கும் எந்த முயற்சிகளையும் கழகம் முறியடிக்கும் என்று முழங்கினார் — பத்திரிகையாளர்கள் மத்தியில். பார்வையாளராக வந்திருந்த நடிகர் ஜெமினி, இந்த விஷயத்தில் நிதானப் போக்கைக் கடைப்பிடிக்குமாறு கா. சா. க. தலைவரைக் கேட்டுக் கொண்டார். திரு. உசிலைமணியை நமது நிருபர் பிரத்தியேகமாகப் பேட்டி கண்டார்.

நிருபர் கேள்விகளுக்கு அவர் பதில் கூறியதாவது:

**நிருபர்:** உங்கள் கா. சா. கழகத்தின் முழுப்பெயர் என்னங்க?

**உ. ம:** 'காசில்லாமல் சாப்பிடுவோர் கழகம்.'

**நிருபர்:** உங்கள் கழகத்தின் லட்சியம்?

**உ. ம:** லட்சியமே இல்லாமலிருப்பதுதான்!

**நிருபர்:** இப்பொழுது அறிவித்திருக்கும் போராட்டத்தைப் பற்றி விவரம் கூற முடியுமா?

**உ. ம:** ஓ! அதாவது எங்கள் கழகத்து உறுப்பினர்கள் மிக மிக ஏழைகள். காசு கொடுத்து உணவு சாப்பிட வசதியற்றவர்கள். முன்பெல்லாம், இவர்களுக்குப் பசி வந்தபோது ஹோட்டல்களில் சாப்பிட்டுவிட்டு பில்லுக்குப் பதிலாக மாவரைத்துக் கொடுக்கும் கௌரவமான பணியில் ஈடுபட்டிருந்தார்கள்.

**நிருபர்:** (இடைமறித்து) உசிலை சார்! இப்பொழுது திடீரென்று என்ன பிரச்னை அவர்களுக்கு?

**உ. ம:** அதைத்தான் சொல்ல வருகிறேன். இப்பொழுது அவ்வாறு கழக உறுப்பினர்கள் செய்யாமல், ஹோட்டல்களில் மாவரைக்கும் இயந்திரங்களை வைத்துவிட்டார்கள். அதிலும் குறிப்பாக ஈரோட்டிலிருந்து தயாராகும் K. A. S. & பிருந்தா மாவரைக்கும் இயந்திரங்களை திரு. K. A. சண்முகம் தயாரிக்க ஆரம்பித்த பிறகு, ஹோட்டல்களெல்லாம் போட்டி போட்டுக்கொண்டு K. A. S. மெஷின்களையே வாங்கி வைத்துவிட்டார்கள். நாள் முழுவதும் ஒரு ஆள் செய்யும் வேலையை, இந்த K A S மெஷின்கள் ஒரு மணி நேரத்தில் முடித்துக்கொடுத்துவிடுகின்றன.

**நிருபர்:** அதற்கும் உங்கள் 'கிடுகிடு' போராட்டத்திற்கும் என்ன சம்பந்தம்?

**உ. ம:** என்ன தம்பி! அப்படி புரியாம கேட்கறீங்க? K. A. S. வந்த பிறகு, எங்க கழக உறுப்பினர்கள் காசில்லாமல் சாப்பிட்டுவிட்டு பில்லுக்குப் பதில் ஹோட்டல்களில் மாவரைத்துத்தர முடியாமல் போய்விட்டதே! இதை எதிர்த்து ஹோட்டல்கள் எதிரில் எமது கழக உறுப்பினர்கள் மறியல் போராட்டம் செய்யப்போகிறார்கள் — என் தலைமையில்.

**நிருபர்:** உங்கள் கோரிக்கைகள் என்ன?

**உ. ம:** ஹோட்டல்களில் K. A. S. போன்ற தரமான மாவரைக்கும் இயந்திரங்களிருப்பதை நாங்கள் எதிர்க்கவில்லை. ஏன், அங்கே சாப்பிடுவோர் என்ற முறையில் வரவேற்கவும்செய்கிறோம். ஆனால் கா. சா. கழக உறுப்பினர்கள் வரும்போது, 1 மணி நேரம் இந்த மெஷின்களை நிறுத்திவிட்டு மாவரைக்கும் பணியை கழக உறுப்பினர்களுக்குக் கொடுத்து வழக்கம்போல் ஆதரிக்கவேண்டுமென்பது எங்கள் முதல் கோரிக்கை! அது இயலாவிடின், கழக உறுப்பினர்களுக்கு மாற்றுப் பணிகளைக் கொடுத்து 'பில்லை' 'அட்ஜஸ்ட்' செய்துகொள்ளும் வசதி தரவும் வேண்டும் என்பது இரண்டாவது கோரிக்கை. இந்த நியாயமான கோரிக்கைகளை முன்வைத்துத்தான் நாங்கள் போராடுகிறோம்.



திரு. K. A. சண்முகம்

**நிருபர்:** தவறாக எண்ணாதிருந்தால், உசிலை சார், ஒன்று கேட்கிறேன். K.A.S. மெஷின்களின் விளம்பரத்திலும் நீங்கள் நடித்துக்கொண்டே இதையும் எப்படிச் செய்கிறீர்கள்?

**உ. ம:** இங்குதான் நீங்கள் தவறு செய்யறீங்க! அது என்னுடைய 'பர்சனல்' தொழில். மேலும் இந்த போராட்டமே மறைமுகமாக K.A.S. மாவரைக்கும் இயந்திரங்களை மேலும் பிரபலமாக்க உதவி செய்யும். அது தவிர, உழைப்பாலே உயர்ந்த திரு. K. A. சண்முகம், தமது தொழிலை எவ்வளவு சிரத்தையாகச் செய்யறாங்க என்பதை நீங்கள் நேரில் பார்த்தால்தான் புரியும்! நான் ஒரு முறை ஈரோடு போய், காவேரி ரோடிலிருக்கும் K. A. S. கம்பெனிக்குப் போனபோது பிரமிச்சுப் போயிட்டேன். 30 லிட்டர் மாவரைக்கும் மெஷினிலிருந்து 1½ லிட்டர் அரைக்கும் மெஷின்கள் வரை, அடேயப்பா எத்தனை ரகங்கள்! K. A. S. பிரதர்ஸ், K. A. S. அண்டு சன்ஸ், மற்றும் K. A. S. இண்டர்நேஷனல் ஆகிய அவங்களுடைய மூன்று கம்பெனிகளும் தயாரிக்கும் K. A. S. மெஷின்கள் இந்தியா தவிர வெளிநாடுகளுக்கும் போவுதாம். எல்லாம் விவரமாச் சொன்னாங்க! மெஷின்களோட தரத்திற்கு விலை ரொம்ப குறைவு. அதுக்கு ஒரு போராட்டம்...!

(நமது நிருபர் சொல்லாமல் வெளியேறி ஓடுகிறார்)

**மனைவி:** என்னங்க பகல்ல தூக்கம்? "K. A. S. K.A.S." என்று வேற தூக்கத்திலேயே சொல்லிகிட்டிருக்கீங்க.

**நான்:** அடடே! இதெல்லாம் கனவா! ஈரோடு K. A. S. கம்பெனியின் விளம்பரத்தை எழுதி பத்திரிகைகளுக்குக் கொடுக்கணும்னு நினைச்சின்டு தூங்கினேனா, கனவிலேயும் K. A. S. விஷயமே வந்திடுச்சு.

**மனைவி:** உங்க கனவையே மேட்டராகக் கொடுத்திடுங்க! ஜனங்க புரிஞ்சுகொண்டு ரசிப்பாங்க!

ADVT.






● மிகவும் சிறந்தமுறையில் ஆண்டு மலரைத் தயாரித்துள்ளீர்கள். வாரா வாரம் தங்கள் இதழ் புதுப் பொலிவோடு வருகிறது.
சென்னை-5 எஸ்.வி. ராஜசேகர்

● எவ்வளவு ஆழமான விஷய தாலங்கள்! அடடா! வித்யாவும் சௌகாரும் 'இலக்கியத்துக்கு'ப் பெரும் தொண்டு செய்திட வழி வகுத்துவிட்டீர்கள்...! எப்பொழுது முழுவதும் சினிமாச் செய்திகளே தாங்கி வரும் 'கல்கி'யை நாங்கள் காண்பது!
மேலூர் சின்னை வெங்கட்ராமன்

● பி. வி. ஆரின் ஜி. எச். ஆரம்பமே பலே ஜோர்! எடுத்த எடுப்பிலேயே என்னைக் கவர்ந்து விட்டது. சென்ட்ரல் ஸ்டேஷன், ஹைகோர்ட், மதுரை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு கதைகள் புனைந்து கவர்ந்த பி. வி. ஆர். G.H.சிலும் வெற்றிக் கொடி நாட்டுவார் என்பது திண்ணம்.
தூத்துக்குடி தங்கபாண்டியன்

● மனைவி: என்ன இது... ஆச்சரியமாக இருக்கே? நம்ம குழந்தைக்கு ஒரு நாள் கூடப் பாடம் சொல்லிக் கொடுத்ததில்லை. எதிர் வீட்டு ராஜுவுக்குக் கணக்குச் சொல்லிக் கொடுக்கிறீர்களே....?

கணவன்: காரணமாத்தான்! கல்கி நற்பணித் திட்டத்துக்கு இந்த வாரம் ஏதாவது செய்தாகணுமே?
சென்னை-38 சரோஜா ராஜாராமன்

● மற்ற அம்சங்களில் 'மணி'யாகத் திகழும் கல்கி பிறந்த நாள் சிறப்பிதழ் முன் பின் அட்டைகளின்மூலம்'ர(ஜனி-கராத்தே)மணி' யாகவும் இருக்கிறது.
பம்பாய் எஸ்.ஆர். சீதாலக்ஷ்மி

● கல்கி ஆசிரியரே, உஷார்! நாங்கள் கராத்தே கற்கிறோம். கல்கியில் எந்தப் பகுதியாகிலும் சுவையாக இல்லையெனில் உங்கள் ஆபீசுக்கு வந்துவிடுவோம்!
காட்பாடி ஜி. ஜி. மோகன்

● இந்தியர்களை "நாய்" என்றும் தேசியக் கொடியைத் தீயிட்டும், தேசப் பிதா காந்திஜியைப் பூட்ஸ் காலால் உதைத்தும் நம்மை அடிமையாக்கி வைத்த பிரிட்டிஷ்காரரின் ஒரு துரும்புகூட இந்தப் பாரத பூமியில் படக்கூடாது என்ற லட்சியத்தை உயிர் மூச்சாகக் கொண்டுள்ள பாரதீய ஜனதா கட்சி, செயின்ட் ஜார்ஜ் கோட்டை விவகாரத்தில் கூறியுள்ள கருத்துக்கள் மிகச் சரியானதாகும். செம்பியன் விமர்சனம் தான் தவறானது.
சிதம்பரம் சிவ. ராஜகுமார்

● பாரதீய ஜனதா கட்சிக்காரர்கள் இனிமேல் பிரிட்டிஷார் போட்ட ரயில் பாதையில் ஓடும் ரயிலில் பயணம் செய்ய மாட்டார்கள். மேல் நாட்டுக்காரர்களின் கண்டு பிடிப்பான காரில் போக மாட்டார்கள். நமது பழைய கட்டை வண்டியில்தான் போவார்கள். இதெல்லாம் தெரியாமல் செம்பியன் செய்தி வாசிப்பது என்ன நியாயம்?
பெங்களூர்-21 கோதை மணி

● ஸ்டைல் நடிகரை அட்டையில் பார்க்கும் போதே உள்ளே என்னென்ன 'ஸ்டண்ட்' அடித்திருப்பீர்களோ!' என்று நினைத்தேன். அதற்கேற்றாற்போல் செம்பியனின் சரித்திர நாவலுக்கு மணியம் செல்வனை விட்டுப் படம் வரையச் சொல்லி அமர்க்களப் படுத்தி விட்டீர்களே!
கும்பகோணம் டி.எஸ். பாலகுருமூர்த்தி

● திரு. செம்பியனின் முதல் சரித்திர நாவலா — "வண்டார் குழலி" — நம்ப முடியவில்லையே! ஆற்றொழுக்கமான நடையில் பாத்திரப் படைப்பிலும், கதை சொல்லும் பாணியிலும் முதிர்ச்சியைத்தான் காண முடிகிறது.
காட்பாடி கோவி. பரஞ்சோதி

● கதையில் அடுக்கடுக்காகச் சம்பவங்கள் 'திணிக்கப்படுவதை'ப் போன்ற உணர்வு. நாற்பது ஐம்பது அத்தியாயங்களில் தொடர் கதையாகவே எழுதியிருக்கலாம்.
விழுப்புரம் ஆர். மார்க்கண்டன்

● "வண்டார்குழலி" கதையைப் படித்தேன். இடையில் இந்த வீர பாண்டியன் எப்படி வந்தான்? இதற்கு முன்னரே ஆதித்த கரிகாலன் வீர பாண்டியனைக் கொன்று வீரபாண்டியன் தலை கொண்ட கோப்பர கேசரி வர்மன்" என்று பெயர் பெற்று விட்டானே!
மேட்டூர் அணை நாதராக

[கதை நடந்த காலகட்டத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பாண்டியர்கள் இருந்தனர் என்பதும் அவர்களில் ஒருவன் அமரபுயங்கன் என்றும் சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். மற்றொரு பாண்டியன் பெயர் அறியப்படவில்லை. ஆயின் ஏதேனும் ஒரு பெயர் சூட்டுவது கதைகூறிச்செல்ல அவசியமாயிற்று. வீர பாண்டியன் என அவனை அழைத்தேன். ஒரு மன்னனின் பெயரையே அடுத்து வரும் பலரும் சூடிக்கொள்வது அந்நாளில் இயல்பே.
—செம்பியன்]

● அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப்போட்டி முடிவு கண்டேன். ஐந்து பிரிவுகளில் மூன்றில் வெற்றி அடைந்தவர்கள் எமது சேலம் மாவட்டக்காரர்கள்! மிகவும் மகிழ்ச்சி கொள்கிறோம்.
மேட்டூர் அணை-4 நா. தங்கராசு
எம். மனோகரன்

● ஹாஸ்யச் சிறுகதையின் சம்பவத்தை படித்துச் சிரிக்கிற ஆக்ஷன் புகைப்படமே ஒரு ரம்யமான விருந்து. (கேத்ரா எடுத்தது) அதுவும் இயற்கையாகச் சிரிக்கிறார்கள் கல்கி ஆசிரியரும், ஐ. ஏ. எஸ்ஸாம், பி. எஸ். மணியும்.

வேலூர் ஜே வி. நாதன்

● சலனம் இல்லாத தெளிந்த நீரோடை போல் மங்களத்தின் வாழ்வு ஒரு தவமாகத் தொடர்ந்த போதிலும் எங்கள் மனத்தினில் ஓர் அழுத்தமான சரச் சுமை. பரிகக் கதைக்குக் கோபுலுவின் ஓவியம் பாராட்டுக்குரியது.

கோலார் தங்கவயல் அமுதா மெல்வி

● 'ஒரு வகுப்பறையின் வாய் அடைக்கப் படுகிறது' என்னும் சிறு கதையின் சம்பவங்கள் நிஜத் தன்மையாயில்லை; ஓவியங்களோ அதை விடவும் பொருத்தமில்லாமல் இருந்தன. நாற்பத்தைந்து வயதுக்காரர்களா படத்தில் உள்ளவர்கள்?

ஏம்பலம் நாககந்தரம்

● கவர்னர் கலைஞரை அழைத்துப் பேசி முதல்வரின் பேச்சு தமக்குப் புரியவில்லை என்றும், இனி தாம் அமைச்சர்கள் பேசும் கூட்டங்களில் ஒரு மொழிபெயர்ப்பாளரை அழைத்துச் செல்வதாகவும் கூறிவிட்ட பிறகு நீர் கலைஞர், கவர்னர் மீது அவதூறு கூறுகிறார் என்று கார்ட்டூன் வரைந்திருக்கிறீரே?

வேலூர் (சேலம்) கவிப்ரியா

● எதற்காக ரோஹிணியை விண்வெளிக்கு அனுப்புகிறோம் என்று புரியாத எனக்குத் தங்கள் கட்டுரையின் மூலம் விண்கோள்களின் அமைப்பு, அதனால் ஏற்படும் நன்மைகளை உணர்த்தினீர்கள். நன்றி.

சென்னை-28 எல்.ஆர். விஜயகுமார்



"அனுபவம் என்பது வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகள் அல்ல. அப்படி நிகழும்போது அதை மனிதன் எப்படி சமாளிக்கிறானோ அது தான் அனுபவம்!"

— ஆல்டஸ் ஹக்ஸ்லி
— ஆர்.எம்.

● 007 பாலு சித்திரத் தொடர் கதை ஆரம்பித்தாலும் ஆரம்பித்தீர்கள். எங்கள் வீட்டுக் குழந்தைகள் ஒவ்வொருவராக அதைப் போட்டி போட்டுக் கொண்டு படிக்க உட்கார்ந்து விடுகிறார்கள்.

ஸ்ரீரங்கம் உஷா முத்துக்கிருஷ்ணன்

● 'பேராசிரியர் கல்கி அவர்களின் வாழ்க்கைச் சரிதமும், மகான் ராஜாஜியின் வரலாறும் வெளியிட்ட கல்கியிலா சஞ்சய் காந்தியின் வாழ்க்கை வரலாறு!' என்று கோபமாய் இருந்தேன்! எவ்வளவு தவறான எண்ணம்! உண்மையைத் தெளிவு படுத்தும் வரலாறு. மயக்கம் தெளிவிக்கும் மருந்து.

பாதூர் ஈ. எஸ். ரங்கநாதன்

● கடுகு பதில்களில் கம்பனின் வாரிசு யாரும் இல்லை யென்று பார்த்தேன். ஆனால் கம்பனின் பக்தர்கள் பலர் உண்டு. அவர்களில் ஒருவர் நெல்லை மாவட்ட கம்பன் கழக ஸ்தாபகர் எம். எஸ். சுந்தரம் பிள்ளை. மிக அழகாகக் கம்பராமாயண மண்டபம் ஒன்றைக் கட்டி அதில் கம்பன் உலோகச் சிலை ஒன்றைப் பிரதிஷ்டை செய்து ஞாயிற்றுக் கிழமை தோறும் மாலை 7 முதல் 8-15 வரை கம்பன் புகழ் ராமாயணச் சொற்பொழிவு உரையாடல்களில் தாமே முக்கிய பங்கு ஏற்கிறார். தமது பஸ் நிறுவனத்துக்கு ஸ்ரீராம் பாபுலர் கம்பெனி என்ற பெயரைச் சூட்டியுள்ளார். கம்பன் பெயரால் பல பஸ் ஸ்டாண்டுகளைக் கட்டி அதில் கம்பன் பெயரை, ராமாயணத்தின் புகழைப் பெரிதாக எழுதியுள்ளார்.

நெல்லை இரா. ராமன்

● 27-7-80 இதழ் தலையங்கத்தில் வருவாய்த் துறையின் பொறுப்பு மிக்க அலுவலர்களை (தாசில்தார்களை) மிகவும் தரக் குறைவாக எழுதியிருப்பது குறித்து மிகவும் வருந்துகிறோம். வன்மையாகக் கண்டிக்கிறோம்.

நாகர்கோவில் த. வீரபாகு
மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம்

● 27—7—80 இதழ் "சட்ட மன்றத்தில் புது முகங்கள்" பகுதியில் திரு கே. தனுஷ்கோடித் தேவர் குறிப்பிடுவதாக வெளியானது தவறாக இருக்கக் கண்டு வருந்துகிறேன். தெய்வீகத் திருமகன் பசும்பொன் தேவரவர்களும் மூதறிஞர் ராஜாஜி அவர்களும் மதுரை தமுக்கத்தில் பேசியது 1959ல் அல்ல 14—1—1962ல்.

மதுரை-2 வீ. எஸ். நவமணி


பாலு வீடு திரும்புகிறான்.
அம்மா டைகர் வந்துதா?
இல்லியே! ஏண்டா, பாலு! தாம்பரம் போகலியா நீ?
இல்லேம்மா.


007 பாலு
கதை: குமரன்
சித்திரம்: விஜு
3
பாலு நடந்ததைக் கூற...
ஏதாவது வீண் வம்பிலே மாட்டிக்காதே! பேசாம பாடத்தைப் படி!
சரிம்மா!


டைகருக்கு என்ன ஆச்சோ! வழி தெரியாம தவிக்கிறதோ?


நல்லவேளை! ஆலமரம் பார்க்க பாலுவோட இந்தப்பக்கம் ஏற்கனவே வந்திருக்கேன்.
ஒருமாதிரி வழி கண்டு பிடிச்சு வீடு திரும்பிடலாம்!


வீட்டை நெருங்குகிறது டைகர்.
பாலு வீடு திரும்பி யிருப்பானோ? ஒருவேளை யார்கிட்டயாவது மாட்டிக்கிட்டு முழிக்கிறானோ?












காந்திநகரில் குறிப்பிட்ட வீட்டை அடைந்ததும் பாலு தோட்டக்காரனிடம்...

ஐயா இருக்காங்களா?

இல்லியே பம்பாய் போயிருக்காரு.

இந்தப் பயல் மறுபடியும் குறுக்கிடறான். ஆபத்தை விலைக்கு வாங்கறான். இவனைக் கவனிக்கிறபடி கவனிக்க வேண்டியது தான்!

தொடரும்

### கவிஞர் மு. மேத்தா
(புதுக் கவிதை)

புதுக் கவிதை உலகில் பிரபலமான மு. மேத்தா தமிழ் இலக்கியத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர். மரபுக் கவிதைகளும் எழுதியவர். ஆனந்தவிகடன், தினமணிக் கதிர் இதழ்களில் சிறுகதைப் போட்டிகளிலும் பரிசு பெற்றவர்.

மரபுக் கவிதை எழுதுவதைவிடப் புதுக் கவிதை எழுதுவது சிரமமானது என்று கூறும் மேத்தா, சிந்தனையோ, கற்பனை வளமோ இல்லாவிட்டால் புதுக் கவிதை வெறும் வசனமாகிவிடும் என்கிறார்.

மதுரை மாவட்டம் பெரியகுளத்தைச் சேர்ந்தவர். கல்லூரியில் படித்த நாட்களில் ஒரு தேர்வில் கவிதையிலேயே கேள்விகளுக்குப் பதில் எழுதிவிட்டு 'மார்க்' கிடைக்காமல் விழித்த மேத்தாவின் கவிதைத் தொகுதி 'கண்ணீர்ப் பூக்கள்' இப்போது மதுரைப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. வகுப்புக்குப் பாட நூல்!

### திரு எஸ். வி. ரமணன்
(விளம்பரப் படங்கள்)

இதுவரை முந்நூறுக்கும் மேற்பட்ட விளம்பரத் துண்டுப் படங்களையும், ஆயிரக் கணக்கில் வானொலி, டி. வி. விளம்பரப் பாடல்களையும் தயாரித்து வழங்கியுள்ள நிறுவனம் 'ஜயஸ்ரீ பிக்சர்ஸ்'. உரிமையாளர் எஸ். வி. ரமணன்.

இசையமைப்பு, பாடல், உரையாடல், பல நேரங்களில் பேசும் குரல்கள் — எல்லாமே இவருடையது என்பது வியப்புக்குரிய செய்தி.

எதைத் தொட்டாலும் திறமை வெளிப் படச் செய்து காட்டிய டைரக்டர் திரு கே. சுப்பிரமணியத்தின் மகன் திரு ரமணன்.

சென்னைத் திரைப்படக் கல்விக் கழகம் தொடங்கிய போது, அதில் பகுதி நேர டைரக்ஷன் ஆசிரியராகப் பணியாற்றிய இவர் தயாரித்த விளம்பரப் படம் ஒன்று (ட்ரு எனர்ஜி) சிகாகோவில் நடைபெற்ற சர்வதேசத் திரைப்பட விழாவில் மிகச் சிறந்த தயாரிப்பு என்று கௌரவிக்கப்பட்டது.

மத்திய அரசு நிறுவனம் ஒன்றுக்காக, இவர் தயாரித்த உரத் தயாரிப்புப் பற்றிய துண்டுப் படத்தைக் கிராம ஜனங்கள் தியேட்டரை விட்டு எடுக்க விடாமல் போடச் சொன்னதுண்டு. வெறும் விளம்பரப் படமாக மட்டுமின்றி, வில்லுப் பாட்டு, நடனம், காதல், வீரம் என்று கதை வடிவில் இவர் அதை அமைத்திருந்ததே காரணம்.

திருமண நிகழ்ச்சிகளில் பாடப்படும் ஓடம், நலுங்கு, லாலி, ஊஞ்சல் போன்ற அனைத்தையும் நாதசுவர இசையில் பதிவு செய்து ஒரே இசைத்தட்டில் வெளியிடவிருக்கிறார் ரமணன். மலேசியா வாசுதேவன், மஞ்சு பார்கவி, சீமா இவர் தயாரித்த விளம்பரப் படங்களில் இடம் பெற்றவர்களே. —சுப்ரபாலன்

### திரு இரா. பூபதி

வித்யா மந்திரில் உடற்பயிற்சி ஆசிரியராகப் பணியாற்றும் இந்த 30 வயது இளைஞர், தம் 12ம் வயதில் ஆசார்ய வினோபா பாவேயுடன் பாதயாத்திரை சென்று வந்தவர். மனைவியுடன் தென்னகம் முழுவதும் சைக்கிளில் சுற்றிச் சாதனை புரிந்தவர்.

அனைத்திந்திய அளவில், கைப்பந்தாட்டம், குண்டு எறிதல் போன்ற போட்டிகளில் பங்கு பெற்ற இவர் ஒரு முறை ஆண் அழகனாகவும் தேர்வு பெற்றுள்ளார்.

விளையாட்டு விமரிசனங்கள் எழுதுவதுடன் நாளிதழ் ஒன்றுக்குச் செய்தியாளராகவும் பணியாற்றும் திரு பூபதி, இப்போது நீச்சல், கைப்பந்தாட்டம், எடை தூக்குதல் இவற்றில் பயிற்சியாளர்.

தகவல்:
ரவிசந்திரன்


× மு. மேத்தா

# புதிய தலைமுறை

× எஸ். வி. ரமணன்



× இரா. பூபதி



# மங்கல மதிமுகத்தில் மெருகூட்ட

# ஐடெக்ஸ்
## டீலக்ஸ் குங்குமம்

காலங்காலமும் நாகரீக மங்கையர்
சூடி அணிவது ஐடெக்ஸ் குங்குமம்.
மங்கையரின் மலர்முகத்தின் இன்னழகை
எடுத்துக் காட்டுவதற்கெனவே
14 கண்கவர் வண்ணங்களில் கிடைக்கிறது.

சாஸ்திரிய முறைப்படி தயாரிக்கப்படும்
ஐடெக்ஸ் குங்குமம் சருமத்திற்கு எவ்வித
தீங்கும் விளைவிக்காது.

**ஐடெக்ஸ்** *38 வருடங்களாக உங்கள்
நம்பிக்கைக்கு உரித்தான உயர்தரத்தின் சின்னம்.*

அரவிந்த் லேபரட்டரீஸ் சென்னை 600 033




Imageads-AL-1240 Tam

# உறவின் கைதிகள்

ஜெயலலிதா

9

என்மேல் உன்றனுக் கெத்தனை அன்படி!
என் உயிர் நீதான்! என்னுடல் நீதான்!
உன்னை யன்றிஇவ் வுலகின் ஆட்சியும்
பொன்னும் வேண்டேன்! புகழும் வேண்டேன்

— பாரதிதாசன்

பூர்ணிமாவும் உஷாவும் சஃபையர் தியேட்டர் போய்ச் சேரும்பொழுது, சுரேஷ் ஏற்கனவே அங்கே வாசலில் தயாராக நின்று கொண்டிருப்பதை உஷா உடனே கவனித்தாள். பூர்ணிமாவுக்கு அவனைத் தெரியாது. அவனும் அதே கல்லூரியில் உஷாவுடன் படிப்பவன்தான் என்றாலும் அன்று ராஜீவை விழாவுக்கு அழைக்கப் போனவர்களில் அவனும் ஒருத்தி அல்ல ஆதலால், அவள் சுரேஷைப் பார்த்திருக்கவில்லை.

காரை பார்க் செய்வதற்காக பூர்ணிமா வண்டியை ஒரு பக்கமாக ஓட்டிச் சென்று நிறுத்தினாள்.

''சுரேஷ் வந்துட்டார்டீ!'' — உஷா இன்னும் காரை விட்டு இறங்கவில்லை.

''எங்கே?''

''அதோ பார்... நேவி ப்ளூ ஷர்ட், அதே கலர் பேண்ட்.... அங்கே படிகளுக்கு முன்னாலே நிற்கிறார் பார்...''

''ஓ! அவர்தான் சுரேஷா?''

''உம்.''

''சரி பின்னே கிளம்பு. இன்னும் ஏன் இங்கேயே உட்கார்ந்துக்கிட்டு இருக்கே?''

உஷா ஒரு விநாடி தயங்கினாள். ''பயமா இருக்கு நிம்மி....''

பூர்ணிமா அவளைப் புரிந்து கொள்ள முடியாதபடி விழித்தாள். ''ஐ ஸே உஷா, வாட் இஸ் ராங்க் வித் யூ? உங்க 'அவரை' பார்க்கணும்னு இந்த நிமிஷம் வரைக்கும் துடிச்சுக்கிட்டு இருந்தே; இப்ப திடீர்னு என்ன ஆச்சு?''

''தெரியலே நிம்மி... ஆல் அஃப் அ ஸடன், ஐ ஃபீல் நர்வஸ்...''

உஷா சட்டென்று பூர்ணிமாவுடைய கையைப் பற்றிக் கொண்டாள்.

அவளுக்குத் தைரியமூட்டும் வகையில் பூர்ணிமா அவள் கையை அழுத்தினாள்.

''ஐ வில் இட் டு யூ, உஷா. வேண்டாம்னு உண்மையா உனக்குத் தோணிச்சின்னு தோபடி கேன் கம்பெல் யூ. நேரா போய் வர முடியாதுன்னு அந்த சுரேஷ் கிட்டே சொல்லிவிட வேண்டியதுதானே?''

உஷா யோசித்தாள். உண்மையாகவே அவளுக்கு வேண்டாமென்று தோன்றியதா? ''டார்லிங், ப்ளீஸ் ஐ மஸ்ட் ஸீ யூ ஸ்வீட்ஹார்ட், ஸே யூ வில் கம்'' அந்த வார்த்தை இன்னும் அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டே இருந்தனவே!

ராஜீவ் அங்கேயே அவள் பக்கத்திலேயே இருந்து கொண்டு அதே வார்த்தைகளை, ஆண்மை மிக்க அவன் குரலில் பேசுவதைப் போன்ற ஒரு பிரமை உஷாவுக்கு உண்டாயிற்று. அவள் வருவாளென்று எத்தனை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பான்! அவனை ஏமாற்றுவதா? அவனுக்காக அவளது ஒவ்வொரு நரம்பும் ஏங்கிக் கதறிக் கொண்டு இருக்கையில், கடைசி நிமிஷத்தில் ஏன் இந்த வேடிக்கையான தயக்கம்? தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

''இல்லே நிம்மி, ஐ'ம் பீயிங் ஸில்லி. நான் போயிட்டு வரேன்.''

உஷா கதவைத் திறந்து காரை விட்டு இறங்கவிருந்தபோது பூர்ணிமா மீண்டும் அவள் கையைச் சட்டென்று பிடித்து நிறுத்தினாள்.

''உஷா....''

உஷா திரும்பிப் பார்த்தாள். பூர்ணிமாவின் முகத்தில் சஞ்சலம் தெரிந்தது.

''உஷா, ஆர் யூ ஷ்யூர்?''

அவளுக்கு நம்பிக்கையூட்டும் வகையில் உஷா புன்னகைத்தாள்.

''யெஸ் நிம்மி, ஐ'ம் ஷ்யூர். என்னைப் பத்திக் கவலைப்படாதே.''

''ஓ.கே. பீ கேர்ஃபுல். அவ்வளவுதான் நான் சொல்ல முடியும்... உஷா, யூ நோ. என்ன நடந்தாலும் ஐ ஆம் யுவர் ஃப்ரெண்ட்.'' நன்றி மிக்க பாவனையோடு உஷா அவளைப் பார்த்தாள்.

''ஐ நோ டியர். தேங்க் யூ ஃபார் எவ்ரிதிங். உன்னுடைய உதவி இல்லேன்னா, நான் அவரைப் பார்க்கவே முடிஞ்சிருக்காது.''

''தென் கேரி ஆன். எனக்கு தேங்க்ஸ் சொல்லிக்கிட்டு இங்கேயே உட்கார்ந்துக்கிட்டு இருந்தா, வெயிட் பண்ணி, பண்ணி போர் அடிக்க உங்க 'அவர்' எங்கேயாவது போயிடப் போறார்'' இருவரும் சிரித்தனர்.

''தேங்க் யூ நிம்மி, பை'' சட்டென்று உஷா தோழியின் கன்னத்தில் முத்தமிட்டாள்.

''நோ, நோ எனக்கு வேண்டாம். ஸேவ் இட் ஃபார் ஹிம்''' என்றாள் பூர்ணிமா குறும்புத்தனமாக. உஷா சிரித்தபோதிலும் அவள் முகமெல்லாம் உஷ்ணமாகிவிட்டது.

வேகமாக இறங்கி சுரேஷை நோக்கிச் சென்றாள். அவளைக் கண்டதுமே சுரேஷ்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

உலகப் புகழ் பெற்ற ஒரு ஆங்கில நாளிதழ் உரிமையாளரை சந்திக்க நேர்ந்த ஒரு அரசியல்வாதி ''தங்கள் பத்திரிகையில் பர பரப்பூட்டும் வகை செய்திகள், விறு விறுப்பான தலைப்புகள், கவர்ச்சியூட்டும் படங்கள் முதலியவைகளை வெளியிடுவதில்லையே, பிற நாளிதழ்களெல்லாம் அப்படி செய்து கொண்டிருக்கும்போது, நீங்கள் வழக்கமான பாணியிலேயே பத்திரிகையை நடத்திக் கொண்டிருக்கிறீர்களே, அது விற்பனையைக் குறைக்காதா?''என்று கேட்டார். அதற்கு உரிமையாளர், ''பாதிக்காது! பிற பத்திரிகைகளை வாங்கிப் படிப்பவர்களெல்லாம் அதில் வெளி வந்திருக்கும் விஷயங்கள் யாவும் உண்மையா? சரியானது தானா? என்பதைத் தெளிவு படுத்திக் கொள்ள எங்கள் இதழை வாங்கியே ஆக வேண்டும்''மென்றார்!

• பரந்தாமன்

மரியாதையாக ''குட் மார்னிங். ப்ளீஸ் கம் திஸ் வே'' என்று அவளை ஒரு கருப்பு நிற அம்பாஸிடர் காரிடம் அழைத்துப் போனான். பின் கதவைத் திறந்து விட்டான். உஷா உள்ளே அமர்ந்ததும் கதவைச் சாத்தி விட்டான்.

ஒருநிமிஷம் உஷா திணறிப்போனாள். ஒன்றுமே புரியவில்லை. உள்ளே ஒரே இருட்டு. அப்புறம் அந்தக் காரிருளின் காரணம் விளங்கிற்று.

பக்கத்துக் கண்ணாடி, பின்கண்ணாடி அனைத்துமே கருப்புத் துணியால் மூடப்பட்டிருந்தது. காரின் பின் ஸீட்டுக்கும் முன் ஸீட்டுக்கும் இடையே ஒரு கண்ணாடிப் பிரிவு விசேஷமாகப் பொருத்தப் பட்டிருந்தது. அதுவும் கருப்பு நிற கர்ட்டனால் மூடப் பட்டிருந்தது.

ஒரு விநாடி இருட்டில் உஷா மூச்சுத் திணறினாள். நாலு புறமும் கண்ணாடியை ஏற்றிப் போர்வையாலும் மூடிவிட்டால் எப்படி மூச்சு விடுவது? அடுத்த நிமிடமே சந்தேகம் நீங்கிற்று.

முன்னால் டிரைவர் ஸீட்டில் சுரேஷ் ஏறி உட்கார்ந்து கதவைச் சாத்திக் கொள்ளும் சப்தம் கேட்டது. அவனைப் பார்க்க முடியாததால், அது சுரேஷாகத்தான் இருக்க வேண்டும் என்று யூகித்துக் கொண்டாள். காரைக் கிளப்பி, சுரேஷ் ஒரு ஸ்விட்சைத் தட்டியதும் உஷா உட்கார்ந்திருந்த காரின் பின்புறம் ஜில்லென்று குளிர்ந்து விட்டது. காரினுள் ஏ. ஸி. இயங்க ஆரம்பித்தது.

எவ்வளவு ஜாக்கிரதையான, முன்யோசனையுள்ள ஏற்பாடு! வெளியிலிருந்து பார்ப்பவர் கண்களுக்கு காரை ஓட்டிச் செல்லும் சுரேஷ் மட்டுமே தெரிவான். பின் ஸீட்டில் யார் இருக்கிறார்கள் என்று யாருமே பார்க்க முடியாத வண்ணம் நாலு புறமும் கண்ணாடி கருப்புத் துணியாலும் மறைக்கப்பட்டிருந்தது!

உஷாவுடைய மனத்துக்கு ஒரு சிறிய ஆறுதல் ஏற்பட்டது. பயம் கொஞ்சம் குறைந்தது. குறைந்தபட்சம் இந்த ஏற்பாட்டால், அவள் ராஜீவுடைய இல்லத்துக்கு வருவதையும்போவதையும் யாரும் பார்த்து விட முடியாதே!

கார் ஒரு கேட்டுக்குள் திரும்புவது போல் தெரிந்தது. கர்ட்டனைச் சற்றே விலக்கிப் பார்த்தாள். ஆம்! ராஜீவுடைய வீடேதான்! வந்து சேர்ந்துவிட்டாள்!

கார் முன் போர்டிகோவுக்குப்போகவில்லை. சுரேஷ், வீட்டின் பின்புறத்தில் காரைக் கொண்டு போய் நிறுத்தினான். அவன் வந்து கதவைத் திறந்து விடவே உஷா இறங்கினாள். ஒரு சைட் வராந்தா மாதிரி தெரிந்தது. அதன் எல்லாப் பக்கங்களிலும் உயரமான சுவர் எழுப்பப்பட்டு அதன் மீது போகன் வில்லாக் கொடிகள் அடர்த்தியாகப் படர்ந்திருந்தன. அவள் அங்கே நிற்பது, பக்கத்து வீட்டில் இருப்பவர்கள் யாருக்குமே பார்க்க முடியாது. வீட்டுக்கு வெளியே போகும் சாலைக்கும் தெரியாது.



"வாங்க." சுரேஷ் அவளை உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

வராந்தாவிலிருந்து உள்ளே நுழைந்ததும் ஒரு சிறிய அறை தெரிந்தது. அங்கிருந்து மாடிப் படிகள் மேலே சென்றன.

"மாடிக்குப் போங்க." சுரேஷ் இதைக் கூறிவிட்டு மறைந்துவிட்டான்.

இது மெய்ன் ஸ்டேர்கேஸாக இருக்க முடியாது. அன்றைக்கு அவள் பார்த்திருந்த பெரிய ஹாலும் வேறு பக்கம் வீட்டின் முன் பக்கம் இருக்க வேண்டும். இந்த மாடிப் படிகள் கால் நடை ஓசை கேட்காதவாறு சிகப்பு நிற கார்ப்பெட்டால் மூடப்பட்டிருந்தன.

மெதுவாக உஷா படிகளில் ஏறிச் சென்றாள். நெஞ்சம் படபடத்துக் கொண்டிருந்தது. படிகளின் இடையில் வந்த திருப்பத்தைக் கடந்து மேலே பார்த்தாள். இன்னும் ஆறு படிகள் மீதம் இருந்தன.



மாப்பிள்ளை: என்ன இது ரயில் டிக்கட் தரேள்?
பெண்ணின் தகப்பனார்: காசியாத்திரைக்குக் கிளம்பத்தான் டிக்கட். போயிட்டுவாங்க காசிக்கு. அதுக்குள் வரதட்சிணை பணத்தை ஏற்பாடு பண்ணி வச்சுடறேன். - லலிதா செல்லப்பா

அந்தப் படிகளின் உச்சியில் விரிந்த புன்னகையோடு ராஜீவ் அவளுக்காகக் காத்து நின்றான்.

ஒரு கணம் உஷா இருந்த இடத்திலிருந்தே அவனைப் பார்த்தாள். "ஸோ, மை விட்டில் ப்ரின்ஸெஸ் இஸ் ஹியர் அட் லாஸ்ட்! வெல்கம், ஸ்வீட் ஹார்ட்!" ராஜீவ் தனது இரு கரங்களையும் நீட்டினான்.

உஷாவின் முகம் மலர்ந்தது. அவள் கண்கள் பனிச்சிட்டன. உதடுகள் துடித்தன. கடைசி ஆறு படிகளில் மின்னல் வேகத்தில் பறந்து சென்று அவன் இரும்புக் கரங்களின் வளையத்துக்குள் போய்ச் சரண் அடைந்தாள். அவன் இறுக்கமான அணைப்பில் உருகினாள். அவன் அகன்ற மார்பில் தனது முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

சில நிமிஷங்கள் இருவரும் அப்படியே மௌனமாக நின்றனர். தனது சக்தி வாய்ந்த கரங்களினால் உஷாவுடைய மெல்லிய உடலைத் தன்னோடு நெருக்கமாக அணைத்து நின்றபோது—விவரிக்க முடியாத ஒரு புதிய உணர்வு ராஜீவின் நெஞ்சினுள் படர்ந்தது. வேறு எந்தப் பெண்ணிடத்திலும் இந்த மாதிரி உணர்வு அவனுக்கு ஏற்பட்டிருக்கவில்லை. என்ன இது? இந்த உணர்வுக்குப் பெயர்தான் என்ன? மோகம்? காமம்? சபலம்? இல்லை! இல்லவே இல்லை! அதற்கெல்லாம் அப்பாற்பட்டது இந்த உணர்வு.

உஷாவின் நறுமணம் கமழும் கூந்தலில் முகத்தைப் புதைத்து அந்தச் சுகந்தத்தை நுகர்ந்தான். வேறு யாரிடத்திலும் ஏற்படாத மென்மையான உணர்ச்சி அவனுள் பிறந்தது. எவ்வளவு இனிமையானவள்! எதுவுமே தெரியாத பச்சிளம் குழந்தை போன்றவள்! அவனையே நம்பித் தன்னை அவனிடத்தில் அர்ப்பணித்துக் கொள்ள எத்தனை அன்புடன், எத்தனை நம்பிக்கையுடன் அப்பாவித்தனமாக வந்திருக்கிறாள்! இவளைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டும். பேணிச் சீராட்ட வேண்டும்! இவளுக்கு எந்த ஆபத்தும் நேராமல் அவன் காக்க வேண்டும்! இப்படிப் பல புதிய எண்ணங்கள் அவன் உள்ளத்துக்குள் தோன்றின.

உஷாவின் மார்பு துடித்தது. அவள் உடல் லேசாக நடுங்கிக் கொண்டிருப்பதை உணர்ந்தான்.

"உள்ளே வா டார்லிங்."

மெல்ல அவளை உள்ளே தனது படுக்கை அறைக்கு அழைத்துப் போனான். அங்கே ஒரு சோபாவில் அவளை அமரச் செய்தான்.

உஷாவின் நெற்றியில் உன்னிப்பாக மிகச் சிறிய வியர்வை முத்துக்கள் தோன்றியிருந்தன. அதை ராஜீவ் கவனித்தான். தனது கைக்குட்டையை எடுத்து அவள் நெற்றி வியர்வையை மெதுவாக ஒத்தி எடுத்தான், ஒரு தாயைப் போல.

உஷா அவனையே ஒருவித மலைப்போடு பார்த்தாள். அவனுக்கு இத்தனை மென்மையா? ராஜீவ் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். உஷாவின் இரு கரங்களையும் தன் கைகளில் எடுத்துக் கொண்டான்.

"அட! என்ன இது! உன் கைகள் ஐஸ் கட்டி மாதிரி இப்படி ஜில்லிட்டுப் போயிருக்கே!"

உஷா தரையைப் பார்த்தாள். இன்னும் அவளால் பேசமுடியவில்லை. அவள் கைகளைத் தனது இரு கைகளின் நடுவே எடுத்துக் கொண்டு, ராஜீவ் அவள் கைகளை வேகமாகத் தேய்த்துச் சூடேற்றினான். உஷாவின் கைகளிலிருந்து பனி போன்ற குளிர்ச்சி நீங்கியது. பழக்கமில்லாத ஓர் இனிய வெது வெதுப்பு அவள் உடல் முழுவதும் பரவிற்று.

"ஃபீலிங் பெட்டர் நௌ?" என்று கேட்டான், அக்கறையோடு. உஷா ஆமாம் என்பது போல் மௌனமாகத் தலையை அசைத்தாள். ராஜீவ் மெல்ல அவள் முகவாய்க் கட்டையின் அடியில் ஒரு விரலை வைத்து அவள் முகத்தைத் தன் பக்கம் திருப்பிக் கொண்டான்.

"உஷா? ஏம்மா, கண்ணு, என்னைப் பார்த்துப் பயப்படறியா?" அந்தத் தழைந்த குரலில் எவ்வளவு மென்மை, எவ்வளவு கனிவு, எவ்வளவு அன்பு! அவள் விழிகளுக்

வாழ்க்கையின் சுபிட்சத்திற்கு நீண்டகால சேமிப்பே நிரந்தர பாதுகாப்பு. உங்கள் மகளின் திருமணம், மகனின் உயர் படிப்பு இவைகளை குறைவின்றி நடத்தி வைக்கவும் உங்களது ஓய்வுகாலத்திற்கு குடைபோல் நிழலளிக்கவும் இன்றே தொடங்கிடுவீர் ஒரு சேமிப்புக் கணக்கை லக்ஷ்மி விலாஸ் பாங்கில் !



# லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர்–639 001.
நிர்வாக அலுவலகம் : சென்னை–600 086.

என்.வி. ஸ்ரீநிவாசன்
சேர்மன்

சிறப்பு சேமிப்புத் திட்டங்கள்:

லக்ஷ்மி ரொக்கப் பத்திரங்கள்
சுழல் முதலீட்டுத் திட்டம்
லக்ஷ்மி தின சேமிப்பு

## உங்கள் குழந்தைகளின் உயர்கல்விக்கு வழிகோலுவது நீண்டகாலசேமிப்பே!



ருன் நோக்கினுன். அவன் கண்கள் எவ்வளவு ஆழமான அன்போடு பனித்திட்டன! இந்த அன்புத் தெய்வத்திடமா அச்சம், நடுக்கம், பயம்? எதற்கு?

அவள் பவழ இதழ்கள் துடித்து லேசாக விரிந்தன. ''இல்லை'' என்று தலையை அசைத்தாள்.

''உஷா! ஐ லவ் யூ!'' இந்த வார்த்தைகளை இதுவரை விளையாட்டுக்குக் கூட ராஜீவ் யாரிடமும் பயன் படுத்தி இருக்கவில்லை. இதற்கு முன்பு அவன் பங்கு பெற்ற காமக் களியாட்டங்களின்போது தப்பித் தவறிக் கூட ''லவ்'' என்ற வார்த்தையை அவன் பிரயோகப்படுத்தி யிருக்கவில்லை. இப்போது முதன் முறையாக அந்த வார்த்தையைச் சொல்ல வேண்டும் என்று அவனுக்குத் தோன்றிற்று. சொன்னுன். ''ஐ லவ் யூ!'' ராஜீவ் சொன்ன வார்த்தைகள் அவள் காதுகளில் எத்தனை அழுத்தமாக, உண்மையாகத் தொனித்தன!

தன் இதயத்தையே தனது விழிகளில் தேக்கி உஷா அவனைப் பார்த்துப் புன்னகைத்தாள். சந்தேகம், அச்சம், குற்ற உணர்வு எல்லாம் அவள் மனத்தை விட்டு அகன்று விட்டன. இப்பொழுது அவள் மனத்தில் தெளிவும் ஆழமான நம்பிக்கையும் பிறந்தன.

ராஜீவிடம் சொல்லில் அடங்காத அன்பு அவள் நெஞ்சை நிரப்பி, வேறு எந்த உணர்வுக்கும் இடமில்லாமல் செய்துவிட்டது. நிர்மலமான அவள் காதலை அவள் கண்கள் பிரதிபலிக்க, ''ஐ லவ் யூ ராஜீவ்!'' என்றுள், உஷா, மெல்லிய, அதே சமயத்தில் திடமான குரலில்.

''ரியலி, மை ப்ரின்ஸெஸ்?''

''யெஸ், ட்ரூலி.''

''ஐ ஷல் ட்ரை டு பீ வர்தி அஃப் யுவர் லவ், மை ப்ரின்ஸெஸ்.''

புனிதமான தெய்வீகக் கலசத்தை ஏந்துவதைப் போல், அவள் முகத்தைத் தனது இரு கரங்களின் நடுவே ஏந்திக் கொண்டான் அவன். அவள் இதழ்களைத் தனது இதழ்களுக்குச் சொந்தம் ஆக்கிக் கொண்டான். இந்த இனிய இணைப்பிலேயே மெய் மறந்து இருவரும் சிறிது நேரம் நீடித்தார்கள்.

''நான் சேர வேண்டிய இடத்துக்குத் தான் வந்து சேர்ந்துவிட்டேன்!'' என்ற விநோதமான எண்ணம் திடீரென்று உஷாவின் உள்ளத்தில் தோன்றிற்று.

''இறைவா! இவள் எப்போதும் என் அருகில் இருந்தால் போதும்! வேறு எதுவும் எனக்கு இனி வேண்டாம்!'' என்ற புதிய எண்ணம் ராஜீவின் உள்ளத்தில் உதயம் ஆயிற்று.

(தொடரும்)

---

கதை, திரைக் கதை, உரையாடல், டைரக்ஷன் எல்லாப் பொறுப்புக்களையும் கே. பாக்யராஜ் ஏற்றிருக்கிறுர். 'பே, பே' என்ற ஊமை பாஷையில் பேசி அருமையாக நடித்திருக்கிறுர். அவர் தற்கொலை செய்து கொள்ள முயலும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கிராமத்துக்குப் புதிதாக வந்திருக்கும் இளம் லேடி டாக்டர் (இளமையாக இல்லாவிட்டால் ஹீரோயினுக வருவதற்கு 'சான்ஸ்' ஏது?) பார்த்துச் சிரித்துப் பரிகசிப்பது சுவாரஸ்யம்.

லேடி டாக்டர் அசுவினி இன்னும் நிறம் மாருத பூவாகவே இருக்கிறுர். அவரது ஏக்கம் கலந்த பார்வை காதல் காட்சிகளுக்கு ஒத்து வரவில்லை.

அசுவினியின் காதலன் இறந்து விட்ட மாதிரி தோன்றச் செய்து, அவர் பாக்கியராஜை மணக்கத் தீர்மானித்து எல்லா ஏற்பாடுகளும் முடிந்து தாலி கட்டப் போகும் நேரத்தில் அவன் திடீரென்று தோன்றுவதாகக் காட்டுகிறுர்கள். பழைய காதலன் தாலி கட்டுகிறுன். பாக்கியராஜ் மானசீகமாகத் தாலி கட்டுகிறுர்.

இது கதாநாயகனுக்கு மட்டும் ஏமாற்றமல்ல; படம் பார்ப்பவர்களுக்கும்தான்!

பசவராஜின் வண்ண ஒளிப் பதிவு மன நிறைவைத் தருகிறது.

''ஒரு கை ஓசை'' ஒரு பக்கம் மட்டும் வெந்த தோசை!

—காந்தன்

## ஒரு கை ஓசை



# கடுகு பதில்கள்!



✖ சிவசக்தி, சென்னை-4

கே. தமிழ்ப்பற்று வேண்டும் என்று இங்கு கூக்குரல் போடுவது போல், இங்கிலீஷ், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய மொழிக்காரர்கள் அலட்டிக் கொள்கிறார்களா?

ப: அவர்கள் அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. காரணம், அவர்கள் மொழியிலேயே விஞ்ஞான ஆராய்ச்சிக் குறிப்புக்கள், புத்தகங்கள் உள்ளன. அவர்களே ஆராய்ச்சி செய்து பல விஷயங்களைக் கண்டறிவதால் அவர்கள் மொழியிலேயே (சில சமயம் புது வார்த்தைகளைக் கண்டு பிடித்து) குறிப்புக்களை எழுதி வைக்கிறார்கள். அங்கு மாணவர்களும் ஆராய்ச்சியாளர்களும் வேற்று மொழியை நாட வேண்டிய அவசியமில்லை. தமிழ் விஷயத்தில் இப்படிக் கூற முடியுமா? ஆகவே தான் தமிழ்ப் பற்று குறைந்துவிடுமோ என்று அஞ்சுகிறார்கள்.

✖ எம். ஆர். மனோகர், பங்களூர்-27

கே. மோப்பம் பிடிக்கும் சக்தி உண்டா என்ற ஏழாந்தர கேள்விகளுக்கும் பதில் எழுதுவது அவசியந்தானா?

ப: எட்டாந்தரக் கேள்விக் குவியலில் ஒரு ஏழாந்தரக் கேள்வி சிறந்ததாகப் பட்டது!

✖ என். ஜெயா, திருவானைக்கோவில்

கே. லண்டன் பள்ளிச் சிறுவர்களுக்கு சர்ச்சில் யார் என்று தெரியவில்லையாம். நம் நாட்டில் மகாத்மா காந்தி யார் என்று குழந்தைகளுக்குத் தெரியுமா?

ப: குழந்தைகளுக்குத் தெரியும். பெரியவர்களுக்குத் தெரியுமா என்று கேட்பதே சரியாக இருக்கும். விடை, சந்தேகம் தான்!

✖ மங்கதேவன், சென்னை-17

கே. ஒரு கிசுகிசு....

ப: உங்கள் பெயரில் 'தேவன்' என்பதை 'சங்கர சாஸ்திரியாக' மாற்றினால் ஒரு புதிய ஜோடி கிடைக்கும். இது அச்சில் வருவதற்குள் 'கிசுகிசு', 'உரக்க உரக்க' ஆகிவிடலாம்!

✖ மேஹர்தாசன், ஈரோடு-10

கே. நட்சத்திரவடிவம் வெட்டி ஒட்டும் போட்டி போன்ற பகுதிகள் கல்கி போன்ற தரமான பத்திரிகைக்குத் தேவைதானா?

ப: தேவை இல்லைதான். அதற்காக 64 பக்கங்களுக்கும் கடுகு பதில்கள் போட முடியுமா?

✖ அமிர்தா சௌந்தரராஜன், ஈரோடு

கே. நாலாயிரம் பிரபந்தத்தை எழுதினீர்கள். இப்போது தங்கள் கவனம் எதில் திரும்பியுள்ளது?

'மர்ரே' இரு ராஜம் வெளியிட்ட கம்பராமாயணத்தைப் பார்த்து எழுதிக்கொண்டிருக்கிறேன். உற்சாகமாக இருக்கிறது. நீங்களும் எழுத ஆரம்பியுங்களேன்.

✖ எஸ். பூவேந்த அரசு, சின்ன தாராபுரம்

கே. ஆண்டவனை மெய்யாலுமே எங்கு காணலாம்?

ப: ஆயிரம் இடங்களில் காணலாம். குழந்தையின் சிரிப்பில், பூவின் மலர்ச்சியில், சூரியனின் உதயத்தில், குயிலின் குரலில், வான வில்லின் வண்ணத்தில்... ஆண்டவனைக் காண மனப் பக்குவம் வேண்டும்.

✖ டி. லக்ஷ்மிரெட்டி, வேலிடுபட்டி (நெல்லை)

கே. 'ஒன்று பட்டால் உண்டு வாழ்வு' என்ற பழமொழியைப் பற்றித் தமிழக ஜனதாக்காரர்கள் என்ன நினைத்துக் கொள்வார்கள்?

ப: கஷ்டமான கேள்வி. இதைப் பற்றிக்கூட ஒருவர் நினைப்பதைப் போல் மற்றவர் நினைக்க மாட்டார். அத்தனை ஒற்றுமை அவர்களுக்குள்! (இதனால் சகலமானவர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால் லக்ஷ்மி ரெட்டி ஒரு பெண் அல்ல! சொல்லி விட்டேன். யாரும் பின்னால் என்மீது குற்றம் சாட்டாதீர்கள்!)

✖ கே. சாந்தகுமார், குரோம்பேட்டை

கே. இன்று பல பத்திரிகைகள் மெள்ள மெள்ள சினிமா பத்திரிகைகளாகி வருகின்றனவே?

ப: அது நம் துரதிர்ஷ்டம். ஆனால் சமீபத்தில் ஓர் இனிமையான அதிர்ச்சி, ஒரு சினிமாப் பத்திரிகையைப் பார்த்தபோது கிடைத்தது. திரைக் கதிர் இதழில் சந்திரகாந்த் என்பவர் திரையுலக நடிகைகளின் பெற்றோருக்கு, திறந்த கடிதம் எழுதியிருந்தார். சிறந்த சிந்தனை பூர்வமான உயர்தரக் கட்டுரை அது.

பரிசு பெறுபவர்:

**என். ஜெயா**
**153-ஏ, தெற்கு தெரு,**
**திருவானைக் கோயில்-620005**



இரண்டாம் சிப்பாய்க் கலகத்தின் போது டெல்லியில்....

ஒரு நாள்.

மேஜர் நிக்கல்ஸன் புலி மாதிரி உறுமிக் கொண்டிருந்தான். அவனுடைய நடைக்கு அந்த ஹால் போதுமானதாக இல்லாமல் போக ஆத்திரத்தைத் தணித்துக் கொள்ள முடியாது போய் நடுவில் இருந்த முகலாயர் காலத்து இருக்கைகளை உதைத்தான். அது வெல்லாம் இவனை மாதிரி பல ஆட்களைப் பார்த்து அலுத்துப்போன சலிப்பில் மயங்கிக் கிடந்தன.

மிடுக்கோடும் சத்தமில்லாமலும் வாசல் ஏறி ஒரு வெள்ளை லெஃப்டினண்ட் ராணுவ விறைப்போடு சல்யூட் அடித்து நின்றான்.

''யெஸ்...''

''டில்லியில் உள்ள எல்லா இடத்தையும் தேடியாகி விட்டது. பையன் கிடைக்க வில்லை. எங்காவது வெளி இடத்துக்குக் கொண்டுபோயிருக்கலாம் என்று சந்தேகப் படுகிறோம்...''

நிக்கல்ஸனின் பார்வையில் எதிராளி பயப் படும்படியாகக் கேலியும் கோபமும் கரந்தன. ''இதைச் சொல்ல இங்கு வந்திருக்கிறாயா?'' என்ற கேள்வி புருவத்தில் விரிந்தது.

''ம்... மேற்கொண்டு என்ன செய்வதாக உத்தேசம் மிஸ்டர் யெங்...''

''சுற்று வட்டாரத்தில் உள்ள கிராமங் களுக்கு ஆள் விட ஏற்பாடு செய்திருக் கிறேன்... டெல்லியை மறுபடியும் அலசி...''

''கெட் லாஸ்ட்...'' என்று பொறுமை யில்லாமல் வெடித்தான் நிக்கல்ஸன். ''நல்ல செய்தி கொண்டு வந்தால் வா. அதுவரை இங்கே வராதே. இன்னும் இருபத்தி நாலு மணி நேரத்தில் பையன் வரவில்லை... அப் புறம் நிக்கல்ஸன் யார் என்று காட்டிவிடு வேன். அதற்கு நான் பொறுப்பில்லை; ஒவ் வொரு துளி ஆங்கிலேய ரத்தமும் நாறுபிச் சைக்கார இந்தியருக்குச் சமம்...''

லெஃப்டினண்ட் யங் மறுபடி ஸல்யூட் அடித்தான்.

''யெஸ்...''

யெங் திரும்பினான். திடீரென்று நிக்கல் ஸன் நிதானமாகக்கூப்பிட்டது அவனுக்கே கலவரத்தைத் தந்தது.

# 'பசி'



''யெஸ் ஸார்...''

''எப்படித் தேடுகிறாய்?''

''வீடு வீடாகப் புகுந்து.''

''நிறைய ஆட்களுடன்.''

''யெஸ் ஸார்.''

''ஒவ்வொரு வீட்டிலும் பெண்கள் இருப்பார்கள்.''

''யெஸ் ஸார்....'' என்று புரியாமல் நெற்றியைச் சுருக்கினான்.

''என் குழந்தை கிடைக்காத ஒவ்வொரு நிமிஷத்துக்கும் ஒரு இந்தியப் பெண் ஒரு வெள்ளைக் குழந்தைக்குத் தாயாக முடியுமில்லையா?...''

யெங் விழித்தான்.

''போ... பிச்சைக்காரர்களிடம் மண்டியிட நாம் மூவாயிரம் மைல் கடந்து வந்திருக்கவில்லை. காலத்தின் முக்கியத்துவம் அவர்களுக்குப் புரியட்டும். என் குழந்தையை மட்டுமல்ல... என் நண்பர்கள் தருகிற குழந்தைகளையும் அவர்கள் பெற்றுத் தரட்டும்.''

யெங் கால்களைப் பெயர்த்து நகர்ந்தான்.

நிக்கல்ஸனின் கொடூரம் சாதாரணமானதல்ல என்பதை அவன் கலகத்தின் போதே பார்த்திருந்தான். ''கட்டுக் கொல்வதால் சிந்துகிற ரத்தம் கொஞ்சம். வெட்டிக் கொன்று பார்... தெரியும். இதுவெல்லாம் ஒரு வீர விளையாட்டு. கோழைகளை ஒரே தடவையில் சாகடித்துவிடு. வீரர்களை அணு அணுவாக ரத்தம் சிந்த வைத்துச் சாகப்பண்ணு. அவனும் அதை ரசிக்கட்டும். சூரியன் அஸ்தமிக்காத இந்த சாம்ராஜ்யத்தின் காவலர்களை இந்த இந்திய முட்டாள்கள் புரிந்துகொள்ளட்டும்.'' என்று கெக்கலி கொட்டுவான். அதைச் செய்கையில் காண்பிக்க என்றும் அவன் தவறியதில்லை.

சிப்பாய் கலகத்தில் தீவிரமான ஓர் இந்தியச் சிப்பாயை ஓடவிட்டு அவன் கழுத்தை ஓடுகிறபோதே சீவி, முண்டம் மட்டும் ஓடப் பார்த்து ரசித்தவன் அவன். நிக்கல்ஸன் கொடூரம் ஆங்கில ஜெனரல்களுக்கும் அருவருப்பைத் தரும். ஆனால் அவனை எல்லோரும் விரும்பக் காரணம் இருந்தது... எதற்கும் துணிந்தவன்.

பகதூர் ஷாவைப் பிடித்ததில் அவனுக்குப் பெரும் பங்கு இருந்தது. அதற்கான உயர்வு கூடக் காத்திருந்தது.

அவன் கொடூரம் வெள்ளைச் சிப்பாய்களைவிடக் கலகக்காரர்கள் மத்தியில் அதிகமாகப் பரவி நடுக்கத்தை ஏற்படுத்தியிருந்தது. இவ்வளவையும் மீறி எவனோ ஒருவன் அவன் நாலு வயதுப் பையனைக் கடத்திக் கொண்டு போயிருந்தான். தன் குழந்தையைக் கடத்த வேண்டும் என்றால் ஒருவனுக்கு என்ன துணிச்சல் வேண்டும் என்று அதிசயித்துப் போயிருந்தான் நிக்கல்ஸன். கட்டாயம் அவன் முகத்தைப் பார்க்க வேண்டும். குழந்தை கிடைத்ததும் அவனுக்கு எப்படித் தண்டனை தர வேண்டும் என்பதே அவனுடைய தற்போதைய யோசனையாக இருந்தது. அதற்குப் பல முறைகளை யோசித்து வைத்திருந்தான். சிவப்பிந்தியரின் அசாதாரணமான கொடுமை பற்றியெல்லாம் கூடத் தெரிந்து வைத்திருந்



தான். நடுவில் பெரும் கலக்கம்: 'குழந்தையை யாராவது கொன்றிருந்தால்?'...

'டில்லியில் இருக்கிற அவ்வளவு குழந்தைகளையும் கொன்று புதைப்பேன்' என்று மனத்துக்குள் சபதம் எடுத்துக் கொண்டான்.

இலேசாகத் தலையைச் சுற்றுவது மாதிரி உணர்ந்தான். 'இரண்டு நாளாயிற்று' சாப்பிட்டு. குழந்தையைக் காணாமல் போன துயரத்தால் சாப்பிடவில்லை. பசி மெதுவாக வயிற்றைக் குடைந்தது.

மாடியில் இருக்கிற தன் மனைவியைப் பார்க்கப் பயமாக... அல்லது பரிதாபமாக இருந்தது. அவளுக்கு இந்தியாவுக்கு வரப் பிரியம் இல்லை; கட்டாயப்படுத்திக் கொண்டு வந்தது எவ்வளவு பெரிய தவறு... காத்திருந்து பெற்ற குழந்தை... அதன் கதி என்ன ஆனதோ...?

சமையல்காரன் பவ்வியமாக வந்து நின்றான். ''ஸாப் இரண்டுநாளாக எதுவும் சாப்பிடவில்லை. இப்போ வேலை அதிகமாக இருக்கலாம்... ப்ளீஸ்...''

ஒரு தடவை அவனை எரிச்சலுடன் பார்த்தான்.

வயிற்றில் பசி அதைவிட அதிகமாக எரிந்தது.

''மேடம் சாப்...?''

''சூப் மாத்திரம் சாப்பிட்டார்கள்.''

நிக்கல்ஸன் கொஞ்சம் யோசித்தான்.... தானே போய் டில்லி முழுதும் சுற்றினால் என்ன என்று மனத்தில் எழுந்தது. தேடவும் முதலில் சாப்பிட்டால் தெம்பாக இருக்கும். தனக்கு வேண்டியவைகளை எடுத்து வைக்கச் சொன்னான். திருப்தியாகச் சாப்பிட்டான். இன்று வழக்கத்தைவிடச் சமையற்காரன் ருசியாகச் செய்திருப்பதாகப் பட்டது. பசி என்று நினைத்துக் கொண்டான். இருந்தாலும் ஆங்கிலேய நற்குணம் தலைகாட்டியது.

''உன்னுடைய தயாரிப்பு இன்றைக்கு மிகவும் பிரமாதம் மைக்கேல்...''

''நன்றி... இன்றைக்குப் புதிதாக ஒருத்தன் கறி கொண்டு வந்திருந்தான்...''

''அவனுக்கும் என் நன்றியைச் சொல்லு.''

தன் படை இருக்கிற இடத்துக்குக் குதிரையை விரட்டினான். குதிரை கூட அவன் குரூரத்துக்குப் பயந்தது.

அவனை எதிர்பார்த்தது மாதிரி ஆஃபீஸர்கள் கும்பல் காத்திருந்தது. குதிரையை விட்டுக் கீழே குதித்தான். சங்கிலியில் பிணைத்திருந்த இருவரைப் பார்த்தான். புருவம் சுருங்கியது.

''யார் இவர்கள்?''

''இவன் மீர் காசிம். இவன் சாந்தாராம். இந்த மீர் காசிம் டில்லியில் நடந்த கலகத்துக்கு முக்கிய பொறுப்பு எடுத்தவன். சாந்தாராம் மீரட் கலவரத்தில் உபதளபதி''

''ஓ...வெல்கம் ஜெனரல்ஸ்...'' என்று எகத்தாளமாக வரவேற்றான் நிக்கல்ஸன். குழந்தை காணாமல் போன கவலை மறந்தது.

''இந்த ஆட்களைத்தானே இரண்டு மாதமாகத் தேடினது?''

''எஸ் ஸார்...''

''இவர்களுக்கு விருந்தளிக்க வேண்டியது நமது கடமை. அதிகாரிகளே! நமது ஆங்கிலேய ஜெனரல்களுக்குச் சமமானவர்கள்... ஆங்கிலேயர்களை இவர்கள் தவறாக எடைபோட்டு விடக் கூடாதல்லவா? வாரன்ஸ், மீர் காசிமுக்கும் சாந்தாராமுக்கும் ஏற்ற மாதிரி உணவு கொண்டுவா... மீர்காசிம் முஸ்லிம். சாந்தாராம் ஒரு ஹிந்து. மறந்து விடாதே...''

வாரன்ஸ் இரண்டு தட்டுக்களைக்கொணர்ந்தான். இரண்டு ஆங்கில வீரர்கள் மீர்காசிமின் கன்னங்களில் ஊசியால் குத்தி வாயைத் திறக்க வைத்தார்கள். மீர் காசிமின் வாயில் பச்சைக் கொழுப்பைத் திணித்தார்கள்.

''சாப்பிடு நண்பனே! இது பன்றிக் கொழுப்பு சாப்பிடு. உனக்காக உன்னை மாதிரி முஸ்லிம் நண்பர்களுக்காகப் பிரத்தியேகமாகத் தருவித்து வைத்திருக்கிறேன்.''

மீர்காசிம் அருவருப்புடன் குமைந்து துப்பப் பார்த்த போது ஒரு வீரன் கையிலிருந்த குச்சியால் வாயில் குத்திக் கொடுமையாக உள்ளே தள்ளுகிறபோது... நிக்கல்ஸன் வெறிகொண்டு சொல்லுகிறான்:

''சாந்தாராம்! உன்னை மறந்துவிட்டதாக நினைக்காதே. உன் புனிதமான பசு உன்னோடு ஐக்கியமாகும், வாரன்ஸ் இவனும் பசியாற வேண்டாமா?''

சாந்தாராமுக்கும் விருந்து கிடைத்தது.

''வயிற்றுக்கு விருந்து ஆகிவிட்டது நண்பர்களே.... கண்ணுக்கும் விருந்து வேண்டாமா?... இதோ.... வாரன்ஸ்...''

வாரன்ஸ் ஓடிவந்தபோது பின்னால் இருவர் பிடியில் அலறிக்கொண்டு ஒரு பெண்... கோஷா உடைகளில்!

நிக்கல்ஸன் விளக்கினான்:

''உன் மனைவி மீர்காசிம்! தலைமறைவாக இருக்கிறாயே... அவள் முகத்தைப் பார்த்து எவ்வளவு நாளாயிருக்கும் உனக்கு? உன்னை அவள் பார்க்கிறபோது ஏற்படுகிற சந்தோஷத்தை நாங்களும் பார்க்க வேண்டாமா? அதற்குத்தான் பிடித்து வைத்திருந்தேன். வாரன்ஸ்... முதலில் அவள் முகத்தைக் காட்ட ஏற்பாடு செய். பின்பு நிர்வாணமாக்கி ஒவ்வொன்றாய்ப் பார்க்கலாம் — எல்லோரும்தான். இந்த மாதிரி சந்தோஷம் எங்கே உங்களுக்குக் கிடைக்கப் போகிறது... அனுபவியுங்கள்.''



ஒருத்தி: ''எங்க வீட்டுக்கு ஒரு வேலைக்காரி வேணும்! உங்க வீட்டிலே வேலை செய்யறவள் எப்படி?''

மற்றவள்: அவளா? மகா சோம்பேறி! வாய் அரட்டை! ஊர் வம்பு பேசறதே வேலை! வார்த்தைக்கு ஒரு பொய் சொல்லுவாள் தனக்கா ஒண்ணும் செய்யத் தெரியாது! மக்கு! எல்லாம் என்கிட்ட வந்த பிறகுதான் கத்துக் கிட்டுவராள்!

–ரமணி ரங்கநாதன்



# The Taj Coromandal Hotel

## the Taj Group's eloquent tribute to the vibrant city of Madras.



Set in the beating heart of South India, the Taj Coromandel Hotel is the finest in Madras. Fully appointed, with 240 rooms and suites, decorated in the unique, vibrant Madras idiom... recalling the South's rich colours and motifs. For your pleasure it brings you 2 speciality restaurants. A coffee shop which is, happily, open round the clock. Opening out on to the swimming pool outside. For business the Taj Coromandel offers you Madras' finest and most extensive conference services.

...And then, the Taj Coromandel brings you Madras, the key point in your discovery of the South's rich cultural heritage. Take off, for instance, to Mahabalipuram, where the 7th century shore temple stands, delicate in ruin. Visit Pondicherry, an old French colony, and Auroville, the peaceful ashram town and international township. Come...

**For reservations call:**
**Bombay: 242524, 243366. Delhi: 322333, 322256. Calcutta: 443795, 443721. Madras: 810441.**

THE TAJ GROUP OF HOTELS, INDIA

''ஷாஹியா....'' என்று அலறுகிறான் மீர் காசிம்.

''நிக்கல்ஸன், நீ அத்துமீறி நடந்துகிறாய்.'' மீர் காசிம் முகம் சிவக்கக் கத்தினான்.

நிக்கல்ஸன் அவனை ஏளனமாகப் பார்த்தான்.

வாரன்ஸ் ஷாஹியாவின் முகத் திரையைக் கிளர்ச்சியுடன் விலக்கிய பின்னர் அவளது ஆடைகளை ஒவ்வொன்றாக... இந்தக் கொடுமை நிகழ்ந்துகொண்டிருக்கிறபோது...

'டுமீல்' என்று ஒரு குண்டு வெடித்தது. ஷாஹியா பொத்தென்று சரிந்து மண்ணில் விழுந்தாள்.

எல்லோரும் திடுக்கிட்டுத் துள்ளினர்.

யாரும் சாந்தாராமைக் கவனிக்காத போது அவன் அருகில் இருந்த லெஃப்டினண்டின் கைத் துப்பாக்கியை உருவி ஷாஹியாவைச் சுட்ட அதே நேரத்தில் — அடுத்து நிக்கல்ஸனின் துப்பாக்கி வெடித்து சாந்தாராமின் கையில் இரத்தம் வழிந்தது.

நிக்கல்ஸன் குரூரத்துடன் திரும்பினான்.

மீர் காசிம் சாந்தாராமின் பக்கம் திரும்பினான். ''நன்றி சகோதரனே!''

''எனக்கு நன்றி சொல்லாதே காசிம். என் சகோதரியின் மானத்தைக் காப்பது என் கடமை.''

மத வேறுபாடின்றி மணக்க மணக்க முறுவலிக்கிறான் சாந்தாராம்....

''முட்டாளே... அவன் முஸ்லீம். நீ ஹிந்து. எப்படிச் சகோதரர்கள் ஆக முடியும்!'' என்று கர்ஜித்தான் நிக்கல்ஸன்.

சாந்தாராம் பளிச்சென்று பதில் சொன்னான்:

''நாங்கள் எல்லோரும் ஒரே மண்ணில் பிறந்தவர்கள், பாரதத் தாயின் புதல்வர்கள்.''

''பரவாயில்லையே! வீரத்துடன் பேசுகிறாயே... எங்கிருந்து வந்தது உனக்கு இந்த வீரம்?''

''இந்த வீரத்தை அலெக்ஸாண்டரை எதிர்த்த புருஷோத்தமன் கொடுத்திருந்தான் எங்களுக்கு. விருந்தோம்பலில் எங்களை மறந்திருந்தோம். நீங்கள் நாடு பிடிக்க வந்த குள்ளநரிகள் என்று தெரியாது எங்களுக்கு. இங்கே ஆண்களின் வீரத்தைப் பற்றி நீ பேசாதே நிக்கல்ஸன். ஒரு பெண்ணின் வீரத்துக்கு முன்பு கூட நிற்க முடியாதவன் நீ. ஜான்ஸி ராணி லட்சுமிபாய். ஞாபகம் இருக்கிறதா உனக்கு? அவள் துரத்த நீ ஓடினதைக் கண்ணால் பார்த்தவர்களில் நானும் ஒருவன்.''

நிக்கல்ஸனின் முகம் சிவந்தது. குதிரைச் சவுக்கை எடுத்துத் தாறுமாறாக வீசினான். பட்ட இடத்தில் எல்லாம் குருதி வழிந்தது சாந்தாராமுக்கு. மீர் காசிம் குமுறலுடன் நின்று கொண்டிருந்தான். ஆயினும் இந்திய மண்ணுக்கே உரிய தியாகச் சிரிப்பை வெடிக்கிறான்.

''முட்டாளே, சிரிக்கிறாயா? இதோ நீயும் வாங்கிக்கொள். இது உன் லட்சுமி பாய்க்கு... இது நானா சாகிப்புக்கு... இது பகதூர் ஷாவுக்கு... கடைசியில் பகதூர் ஷா கதி என்ன ஆனது தெரியுமா? ரங்கூன் அனுப்பி யிருக்கிறோம். பாவம் பசிக்கிறது என்று சாப்பிடக் கேட்டான். கொண்டு போய்க் கொடுத்தோம். எதைத் தெரியுமா? அவன் இரண்டு பிள்ளைகளின் தலையை....''

''அவன் அதைச் சாப்பிட்டானா நிக்கல்ஸன்?....''

''முட்டாளே! எவனாவது பெற்ற குழந்தையைச் சாப்பிடுவானா?''

பதில் சொன்னான் நிக்கல்ஸன்.

மீர்காஸிம் திடீரென்று கட்டிடமே இடிந்து போகிற மாதிரி சிரித்தான். சாந்தாராமின் சிரிப்பும் அதில் கலந்தது.

''எந்த முட்டாளும் பெற்ற குழந்தையைச் சாப்பிட மாட்டான் நிக்கல்ஸன்... ஆனால் நீ சாப்பிட்டிருக்கிறாயே... நீ பெற்ற குழந்தையைச் சாப்பிட்டுவிட்டுத்தானே இங்கே வந்திருக்கிறாய்? உன் குழந்தையின் கறி மிகவும் ருசியாக இருந்ததாகப் பாராட்டினாயாமே....!''

நிக்கல்ஸன் குபுக்கென்று வாந்தி எடுத்தான். அவனது துப்பாக்கி பல தடவை வெடித்து வெறி அடங்காமல் தவித்தது.

ஆகஸ்டு நாற்பத்தேழு வரை...!

---

ஒரு முறை ஆண்டவன் தன் அழகிய தேவதைகளில் ஒன்றைக் கூப்பிட்டு மனிதர்கள் வாழும் உலகத்திற்குச் சென்று மிகவும் உயர்ந்த விலை மதிக்க முடியாத பொருள் ஒன்றைக் கொண்டு வரும்படி கட்டளையிட்டார். அந்தத் தேவதையும் உலகத்திற்கு வந்து பல்வேறு அழகிய பொருட்களைப் பார்த்து, கடைசியில் பல் வகைப்பட்ட வைரங்களை எடுத்துச் சென்று ஆண்டவனிடம் காண்பித்தது. ஆனால் ஆண்டவன் அதைக் கண்டு திருப்திப்படவில்லை. மனம் நொந்துபோன தேவதை ஆண்டவனைத் திருப்திப்படுத்த என்ன செய்வது என்று விழித்துக் கொண்டிருக்கையில் எங்கிருந்தோ ஒரு மனிதன் அழும் சத்தம் கேட்டது. ஒரு மனிதன் ஆண்டவன் சன்னிதானம் ஒன்றில் தான் செய்த தவறுதல்களுக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வருந்திக் கண்ணீர் சிந்திக்கொண்டிருப்பதை அந்த தேவதை பார்த்தது. உடனே, உலகிலேயே மிகவும் விலை மதிக்க முடியாத பொருள் கிடைத்துவிட்டது என்ற மகிழ்ச்சியில், அவன் சிந்திய கண்ணீர்த் துளிகளை ஒரு சிறு கிண்ணத்தில் ஏந்தி வந்து ஆண்டவனிடம் அளித்தது. ஆண்டவன் பேரானந்தத்துடன் அதைப் பெற்றுக் கொண்டார். (ஒரு ஆங்கில சிறுகதைப் புத்தகத்திலிருந்து)

- பி. நாராயணன்





# மாதவனுக்கு வந்த அழைப்பு

**லட்சுமி ரமணன்**

**மா**தவன் வீட்டில் இருக்கவில்லை. மானேஜர் அவனை எங்கேயோ வெளியில் அனுப்பியிருந்தார். அவனுடைய மேஜை மீதிருந்த டெலிபோன் அடித்துக் கொண்டேயிருந்தது.

பக்கத்து ஸீட்டு மணி, எதிரே இருந்த ராமானுஜத்தைப் பார்த்து ஒரு மாதிரி சிரித்தான். 'போனை எடுத்துப் பேசு' என்பது போல் ராமானுஜம் அபிநயம் பிடித்தார். 'நான் மாட்டேன்' என்பதுபோல் மணி தலையசைத்தான்.

அந்தச் சமயம் பார்த்து பியூன் கந்தசாமி அந்தப் பக்கம் வரவே, 'நீ எடு' என்று இருவரும் அவனுக்கு ஜாடைகாட்டினார்கள்.

கந்தசாமி ரிஸீவரை எடுத்து 'ஹலோ' என்றான்.

''மாதவன் சார் இருக்காரா?''

''ஒரு நிமிஷம்.'' கந்தசாமி பேசும் இடத்தைக் கையால் மூடிக் கொண்டு ''மாதவன் சார் வேணுமாம். அவர் மனைவி போல் இருக்கு'' என்றான்.

''அவர் வெளியே போயிருக்கார்னு சொல்லு.'' — இது மணி.

அவன் சொன்னான்.

டெலிபோன் இணைப்பு பட்டென்று துண்டிக்கப்பட்டு விட்டது.

மாதவன் வீட்டுக்கு ஆபீஸிலிருந்து போன் கொடுத்ததிலிருந்து அவர்களுக்குக் கொஞ்சம் அசூயை பிறக்கத்தான் செய்தது. அவனைக் கிண்டலும் செய்தார்கள்.

அவன் திரும்பி வந்ததும் —

''என்ன விஷயம் என்று கேட்டுப்பாரேன். ஏதாவது அர்ஜெண்டாக இருக்கப் போகிறது'' — இது மணி.

அவன் மறுத்தாலும் அவர்கள் விட மாட்டார்கள் போல் இருந்தது. வேறு வழியின்றி மாதவன் வீட்டு நெம்பரைச் சுழற்றினான்.

''ஹலோ!'' — மாதவன் ஆத்திரத்தோடு!

''அடேடே நீங்களா? வெளியே போயிருந்தீர்கள் போல் இருக்கு'' — அவன் மனைவி!

''ஆமாம். நான் எங்கே போகிறேன் வருகிறேன் என்று வேவு பார்க்கத்தான் வீட்டுக்குப் போன் கொடுத்திருக்கிறீர்களா?''

''ஏன் கோபித்துக் கொள்கிறீர்கள்?''

''எதுக்குக் கூப்பிட்டாய்?''

''சும்மா வந்து...'' அவள் துவங்குவதற்குள் மாதவன்பொறுமை இழந்து ரிஸீவரை வைத்து விட்டான்.

காரணமில்லாமல் ஆபீசுக்குப் போன் பண்ணாதே என்று சித்தாமணியிடம் அவன் எத்தனையோ முறை சொல்லியாகி விட்டது.



அன்று மாலை ஆபீஸிலிருந்து வீடு திரும்பிய மாதவன் கோபத்தில் அவளிடம் ஏகமாகக் கத்தித் தீர்த்தான். அதன் பிறகு அவனுக்குப் போன் செய்வதையே நிறுத்தி விட்டாள்.

ஓரிரு மாதங்கள் ஓடிவிட்டன.

ஒரு நாள் மாதவன் வேலை மும்முரத்தில் இருந்தபோது டெலிபோன் அடித்தது.

மாதவன் எடுத்தான்.

''நான்தான் சிந்தாமணி...''

''நான் இப்போது வேலையாக இருக்கேன். தொந்தரவு பண்ணாதே'' — மாதவன் டக் கென்று தொடர்பைத் துண்டித்து விட்டான்.

மாலை வீடு திரும்பியதும் வாசலில் ஒரு சிறு கூட்டம். 'என்ன விஷயம்' என்று புரியாமல் உள்ளே நுழைந்தவனுக்கு அங்கே கண்ட காட்சி இடி விழுந்தது போல் இருந்தது.

டெலிபோனுக்கு அருகில் சையில் ரிஸீவருடன் சிந்தாமணி கீழே விழுந்து கிடந்தாள். அவளைச் சுற்றி இரத்தம் உறைந்து போயிருந்தது. வீட்டில் அலமாரிகள் பெட்டிகள் எல்லாம் திறந்து கிடந்தன.

''போலீஸ், போலீஸ்'' என்று முணு முணுத்தார்கள் சிலர்.

''ஐயா கொஞ்சம் தள்ளி நில்லுங்க. நீங்க தான் மாதவனா? இந்த வீட்டுக்காரரா? வழி விடுங்க. பிங்கர் பிரிண்ட்ஸ் எடுக்கணும்.''

''பட்டப் பகலில் இப்படி வீட்டில் நுழைஞ்சு கொள்ளை அடிக்கிறது இருக்கட்டும். குத்திப்போட்டு மனுஷன் உயிரையும் இல்லே எடுத்திடறாங்க பாவிப் பசங்க!'' பின்னால் யாரோ பேசிக் கொள்கிறார்கள்.

''கொஞ்சம் முன்னால்தான் வேலைக்காரி வந்து பார்த்துட்டு ஓடிவந்து விஷயத்தைச் சொன்னாள். நம்ம வீட்டுப் பையனை உங்க ஆபீசுக்கு அனுப்பி இருக்கேன்? அதுக்குள்ளே நல்ல வேளையாய் நீங்களே வந்துட்டீங்க'' என்றார் பக்கத்து வீட்டுக்காரர்.

திருடன் தன்னைக் குத்திவிட்டு ஓடின செய்தியைச் சொல்லத்தான் அவள் போன் செய்திருக்க வேண்டும். ஆனால் அவன் அவள் வழக்கம்போல் காரணமில்லாமல் அழைப்ப தாக நினைத்துப் பேச மறுத்து விட்டானே!

மாதவன் பிரமை பிடித்து நின்றான்!

விமல் மட்டுமே ஒவ்வொரு வருடமும்
தனித்தன்மை வாய்ந்த சூட்டிங் தயாரிக்கும்
கலையில் நிகரற்று விளங்குகிறார்கள்.
பாரம்பரியம் தொடர்கிறது.

# நிகரற்ற வி

மல்

விமல் அறிமுகப்படுத்தும்

- ட்ராபிகூல்
- ஆல்டைம்ஸ்
- பாலிவுல் • பாலிகூல்
- லார்ட் வெஸ்ட்
- வுல்டேஸ்
- கோல்ட்ஏஜ்

முதன் முதலான முழு-வருட
வொர்ஸ்டட் ஸூட்டிங் ரகங்கள்.




ஸூட்டிங்குகள்

இந்தியாவின் அதிநவீனமான
நெசவாலையிலிருந்து

# கடமை நெஞ்சம்

## மன்னார்குடி விசுவநாதன்

கண்டக்டர் காந்தமணி டிக்கட் புத்தகத்தைச் சரிபார்த்து, இன்வாய்ஸ் பதிந்து, தோல் பையினுள்ளிருந்த பணத்தையும் எண்ணி ஒழுங்கு படுத்திவிட்டு, கொட்டாவி விட்டவாறே, 'ஸ்...அப்பாடா...' என்று முணு முணுத்துக் கொண்டான்.

வீட்டின் நினைவு வந்தது.

இவன் பஸ் கம்பெனி ஆபீஸில் பணத்தைக் கட்டிவிட்டு வீடு போய்ச் சேருவதற்குள் பிள்ளைகள் தூங்கிவிடுவார்கள்.

சாரதா மட்டும் விழித்தே என்று உட்கார்ந்து கொண்டிருப்பாள். இல்லையெனில் பாயை விரித்துப் படுத்தவாறே ஏதாவது புத்தகம் படித்துக் கொண்டிருப்பாள்.

இவன் போனவுடன் தயாராகப் பானையில் கட்டுக் கொண்டிருக்கும் வெந்நீரை அண்டாவில் எடுத்து ஊற்றித் தொட்டி முற்றத்தில் வைத்து அளவுடன் தண்ணீர் கலந்து விளாவி வைப்பாள். இவன் குளித்து முடிப்பான்.

குலுங்கலுடன் பஸ் நின்றது.

சிந்தனை கலைந்தவனாக இருக்கையிலிருந்து எழுந்து பார்த்தான் காந்தமணி.

பஸ்ஸினுள் ஓர் ஆணும் பெண்ணும் மட்டுமே உட்கார்ந்திருந்தவர்களில் ஆண் உறங்கிவிட்டார்.

சிந்தனை கலையாமலே, ''ரைட்'' கொடுத்துவிட்டு பஸ்ஸின் உள்ளேயே நடந்தான் காந்தமணி.

பஸ் இன்னும் ஐந்து கிலோ மீட்டர் தூரம் செல்ல வேண்டும்.

வயது முப்பது இருக்கும்: திருமணம் ஆன பெண்மணி போலத்தான் தோன்றியது.

ஓ....அந்த அழகு... சிவந்த மேனி... சதைப் பிடிப்பான உடம்பு. செழிப்பான மார்பகங்கள். அழகான முகம். ஏதோ சிந்தனை வயமானவளாக, இருள் கவிந்த அந்தச் சாலையில் இலேசாக அசைந்து கொண்டு நின்ற மரங்களையும் பொட்டல் வெளிகளையும் கூர்ந்து கவனித்துக் கொண்டே வந்தாள் அவள்.

மீண்டும் மீண்டும் அந்தப் பெண்மணியின் செழிப்பான அழகும், தனிமையான அந்தச் சூழ்நிலையும் அவனைப் படாத பாடு படுத்திக் கொண்டே இருந்தன.

ஒருவாறு துணிச்சலை வரவழைத்துக் கொண்டு இருக்கையில் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்தான் காந்தமணி.

பஸ் நின்றது.

'விசுக்'கென்று அவள் பக்கத்தில் உட்கார்ந்த காந்தமணி எழுந்து நன்றுகொண்டான்.

டிரைவர் சின்னத்தம்பி காந்தமணியைப் பார்த்து இரண்டு விரல்களை விரித்துக் காட்டி விட்டுக் கீழே குதித்தான்..

சரியான சந்தர்ப்பம்.

அந்தப் பெண்மணியின் மேல் பாய்ந்த காந்தமணி, அந்தக் குலைவாழை மேனியாளைத் தன் பிடிக்குள் கொண்டுவர அரும்பாடுபட்டான்.

சில நிமிடப் போராட்டம்.

முடிவாக, ஒரே தள்ளாகக் காந்தமணியைத் தள்ளி விட்டுக்குபீரென்று கீழே பாய்ந்தாள் அந்தப் பெண்மணி.





அங்கே, குட்டையில் கால்களைக் கழுவிக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருந்த டிரைவர் சின்னத்தம்பிக்கு ஒன்றும் புரியவில்லை.

கீழே விழுந்த அந்தப் பெண்மணி கொஞ்ச தூரம் சாலையில் ஓடத் தொடங்கினாள்.

இன்றைக்கு இவளை விடக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்ட காந்தமணி பஸ்ஸை விட்டுக் கீழே இறங்கி அவளைத் துரத்த முற்பட்டான்.

அவனுள் எழுந்த மோகவெறி அவனைப் படாத பாடு படுத்திக் கொண்டிருந்தது.

இதற்குள் ஒளி பாய்ச்சிக் கொண்டு வந்த பஸ் ஒன்றைக் கை காட்டி நிறுத்தி அதில் ஏறிக்கொண்டு விட்டாள் அந்தப்பெண்மணி.

தாகமும், தாபமும் அடங்கப் பெறாதவனாகச் செயலற்றுத் திரும்பிய காந்தமணி என்ன ஏது என்று கேட்ட டிரைவர் சின்னத் தம்பியிடம் ஏதேதோ சொல்லிச் சமாளித்துக் கொண்டு புறப்பட்டான்.

பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸை நிறுத்தி விட்டு, அதுவே கடைசி டிரிப்பாக இருந்ததால் டிரைவரிடம் சொல்லி 'ஷெட்'டுக்குக் கொண்டு போகும் படி சொன்னான் காந்தமணி.

ஆபிஸில் கணக்கு வழக்குகளை ஒப்படைத்து விட்டு வாசல் பக்கம் காந்தமணி வருவதற்கும் போலீஸ் ஜீப் ஒன்று அவனை உரசியவாறு வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது.

ஜீப்பினுள் அந்தப் பெண்மணியும் இருந்தாள்.

அவள் அடையாளம் காட்டியது தான் தாமதம். போலீசார் விரைந்து வந்து காந்த மணியின் கைகளில் விலங்கு மாட்டி அழைத்துச் சென்றார்கள்.

திக்பிரமை பிடித்தவனாய்ச் செயலற்றுப் போனான் காந்தமணி.



**போ**லீஸ் ஸ்டேஷன்:

கீழே தரையில் குனிந்த தலையுடன் உட்கார்ந்திருந்தான் காந்தமணி.

உடம்பெல்லாம் ரணமாக வலித்தது. இந்நேரம் ஒழுங்காக வீடு போய்ச் சேர்ந்திருக்க, மனைவி சாரதா போட்டுக் கொடுக்கும் வெந்நீரில் குளித்துச் சாப்பிட்டபின், பாயில் படுத்துக் கொள்ளலாம். ஆனால் இன்று...

வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது.

'சே... என்ன வாழ்க்கை இது...இத்தனை நாட்களாக இல்லாமல், இந்த நாற்பதாவது வயதில் இப்படியொரு சபலத்துக்கு ஆளாகி, போலீஸ் ஸ்டேஷனில் வந்து உட்காரும்படி ஆகிவிட்டதே...'

''மிஸ்டர் காந்தமணி... உங்கள் மேல் வழக்குப் பதிவு செய்யப்பட்டு விட்டது. நீங்களும் குற்றத்தை ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். அந்தப் பெண்மணி கண்ணியமான ஒரு அதிகாரியின் மனைவி...''

''அறிவு கெட்டுப் போய் இப்படி நடந்து கொண்டேன் சார்...''

''அறிவு கெட்டுப் போனாலும் எந்த மனிதனும் — அதிலும் உங்களைப் போன்று பொது மக்கள் பணியில் கடமை ஆற்றும் நிலையில் இருப்பவன் இப்படிச்செய்திருக்கவேகூடாது. ஆல் ரைட்... யு டேக் ரெஸ்ட். நாளைக் காலையில் யாரையாவது ஜாமீனுக்கு வரச் சொல்லுங்க. உங்களை கோர்ட்டில் ஆஜர் படுத்தி விடுகிறோம். பிறகு வழக்கு இருக்கிறது. நீதி மன்றத்தின் தீர்ப்பு இருக்கிறது.'' சப்–இன்ஸ்பெக்டர் சொல்லிக் கொண்டே போனார்.

பசி வயிற்றைப் பிசைந்தது காந்தமணிக்கு. பக்கத்திலிருந்த பானையைத் திறந்து தண்ணீரை மொண்டு குடித்தான்.

நிமிர்ந்து பார்த்தார் சப்-இன்ஸ்பெக்டர்.

''ஓ. மிஸ்டர் காந்தமணி... நீங்கள் ஒன்றும் சாப்பிடவில்லை அல்லவா? ஐ ஆம் ஸாரி....'' என்று பரிதாபமான குரலில் சொல்லிவிட்டு, உள்ளே திரும்பி, ''த்ரீ நாட் ஒன்...இங்கே வாங்க... இந்தாங்க சில்லறை. பக்கத்து ராயர் ஓட்டலில் இட்லி இருக்கும். ஆறு இட்லிகளை வாங்கிக் கட்டி எடுத்துக்கிட்டு வாங்க'' என்று சொல்லிவிட்டுச் சில்லறையைக் கொடுத்தார் சப் இன்ஸ்பெக்டர்.

''வேண்டாம் சார்... எனக்கு ஒன்றும் வேண்டாம் சார். என்னை வெளியே விட்டுட்டீங்கன்னு பேசாமே தூக்கு மாட்டிக்கிட்டு உயிரை மாய்ச்சுக்குவேன்...''

''ப்ளீஸ்... அப்படி யெல்லாம் பேசாதீங்க காந்தமணி... நீங்க இதைப் போல என்கிட்டே பேசுவதே குற்றம். பரவாயில்லை. ஆண்டவன் மனிதனைப் படைத்தது அறநெறிகளைப் பின்பற்றித் தானும் வாழ்ந்து, பிறரையும் வாழ வைக்க வேண்டும் என்பதற்காகத்தான். தற்கொலையைப் பற்றி நினைப்பதுகூட மாபெரும் கோழைத்தனம்.....''

சூடான இட்லி வந்தது.

சப்-இன்ஸ்பெக்டரின் வற்புறுத்தலுக்கிணங்க அந்த இட்லிகளைத் தின்று முடித்து விட்டுப் படுத்துவிட்டான் காந்தமணி.

**கா**லை பதினொரு மணி.

காந்தமணியுடன் பணியாற்றும் சக

# முந்திக்கொண்டார்கள்







**1982** மகாகவி பாரதி நூற்றாண்டு. அவர் பிறந்த நாட்டில் என்னென்ன செய்து அவரைப் பெருமைப்படுத்தப் போகிறோமோ, தென் ஆப்பிரிக்கத் தமிழர்கள் முந்திக் கொண்டார்கள்.

''எழுபத்தெட்டு வயது இளைஞர்'' என்று சொல்லத் தக்க திரு என். சி. நாயுடு டர்பன் நகரத்துக் கல்வியாளரும் கலாச்சாரத் தலைவருமாவார். அவர் முயற்சி, முதலீட்டால் பாரதியாரின் 27 பாடல்கள் அடங்கிய இரண்டு எல். பி. இசைத்தட்டுக்களும் மகாகவி பாரதியார் கதாகாலட்சேபம் ஒரு எல்.பி இசைத்தட்டும் வெளியிடப்பட்டுள்ளன. விற்பனைத் தொகை முழுவதும் டர்பன் சைவ சித்தாந்த சங்க அறப் பணிகளுக்குப் போகின்றது.

முதலில் 3000 இசைத்தட்டுக்களை திட்டமிட்டார்களாம். ஆனால் இதுவரை 8000 இசைத்தட்டுக்கள் விற்பனையாகியுள்ளனவாம். அந்த அளவுக்குப் பாரதி ஈடுபாடு அந்தத் தமிழர்களுக்கு உள்ளது என்கிறார். இந்த முயற்சிக்குக் கருவியாய்ப் பயன்பட்ட திரு கு. தேவநாராயணன். (படம்)

எச். எம். வி. நிறுவனத்து ரெகார்டிங் இஞ்சினீரான திரு கே. எஸ். ரகுநாதன் இசையமைத்துள்ளார்.

திரு டி. எல். மகராஜன். திருமதி எம். ஆர். விஜயா திரு. தேவநாராயணன் போன்ற பல பாடகர்களின் குரல்கள் இந்த இசைத் தட்டுக்களில் ஒலிக்கின்றன. —பெஸ்பாக்

ஊழியன் ஒருவன் கோர்ட்டுக்கு வந்து வக்கீல் மூலம் ஜாமீன் மனு தாக்கல் செய்து விடுதலை வாங்கிக் கொடுத்தான்.

முதல் காரியமாக சப் இன்ஸ்பெக்டருக்கு நன்றி சொல்லிவிட்டுத்தான் வீட்டுக்குப் போகவேண்டும் என்று எண்ணி நண்பனைப் போகச் சொல்லிவிட்டு இவன் மட்டும் போலிஸ் ஸ்டேஷன் பக்கம் சென்றான்.

சப்-இன்ஸ்பெக்டர் அப்பொழுதுதான் வீட்டுக்குப் போனார் என்று ரைட்டர் சொல்லவே பக்கத்திலிருந்த போலீஸ் காலனியில் சப்-இன்ஸ்பெக்டர் வீட்டைத் தேடிக் கொண்டு சென்று வீட்டு வாசலில் நின்றான்.

சிலுவையில் அறையப்பட்ட நிலையில் ஏசுநாதரின் உருவச் சிலை யொன்று வாசல் முகப்புச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்தது.

வாசலில் 'பரம பிதாவே... என் நண்பர்கள் தெரியாமல் தவறு செய்கிறார்கள்... அவர்களை மன்னியுங்கள்,...' என்ற வாசகம் எழுதப்பட்டிருந்தது. அப்படி யென்றால் சப்-இன்ஸ்பெக்டர் கிறிஸ்தவரா? ஆமாம்... அவர் பெயர் கூட மரிய சூசை என்று தான் சொன்னார்கள்.

''என்னப்பா காந்தமணி! ஜாமீன் விடுதலை கிடைச்சுதா?'' என்று கேட்டவாறே வெளியே வந்தார் சப்-இன்ஸ்பெக்டர்.

''சார் நீங்கள் மனிதருள் மாணிக்கம். உங்களுக்கு நன்றி சொல்ல வார்த்தைகளே இல்லை. நேற்று என்னை ஸ்டேஷனில் வைத்து அடித்து நொறுக்கி விடுவீர்கள் என்றுதான் நினைத்தேன். ஆனா நீங்க உங்க கனிவான பேச்சினாலும், இதமான நடவடிக்கையினாலும் என் கெட்ட மனசை அடித்து நொறுக்கிட்டீங்க...''

''என்னப்பா செய்யறது? கடமையையும் அதன் கண்ணியத்தையும் மறக்கலாமா? உனக்கும் காக்கிச் சட்டைதான். எனக்கும் காக்கிச் சட்டைதான். இந்தச் சட்டையோட மதிப்பு உனக்குத் தெரியும்னு நினைக்கிறேன். மனசு மறந்தாலும் உடையாவது நம்ம கடமையை நமக்கு நினைவுபடுத்தட்டுமேன்னுதான் இதுபோல ஒவ்வொரு முக்கியமான உத்தியோகத்துக்கும் ஒவ்வொரு யூனிபாரம் கொடுத்திருக்காங்க....''

காந்தமணியால் பேச முடியவில்லை.

மெல்லத் திரும்பி நடந்தான்.

''இருப்பா... ஒரு கப் காப்பி சாப்பிட்டுட்டுப் போகலாம்...'' என்று சொல்லி விட்டு உள்ளே திரும்பினார் சப்இன்ஸ்பெக்டர்.

அந்தப் பெண்மணி கொண்டு வந்து கொடுத்த காப்பிக் கோப்பையை வாங்கப் போன காந்தமணி துடித்துப் போனான். ''இது வந்து.... இந்தப் பெண்மணி... வந்து...'' — நாக்குழறியது அவனுக்கு.

''உன்னோட பஸ்ஸில் தனியாகப் பயணம் செய்தவள்தான்... உன் மேலே புகார் செய்தவள்தான்... சாட்சாத் என் மனைவியே தான்...'' என்று சொல்லிவிட்டு, மோட்டார் சைக்கிளில் ஏறிக்கொண்டு தம் கடமைகளைச் செவ்வனே செய்வதற்காக விரைந்தார்.

காந்தமணி அந்தப் பெண்மணியின் காலடியில் விழுந்து கிடந்தான்.




# விலை ஏற்றம் 125%

இந்துஸ்தான் போட்டோ பிலிம் நிறுவனத்தின் இந்து சினிமா பிலிம் சுருளும், புகைப்படப் பிலிம் சுருளும் விஷம் போல் கிடுகிடுவென்று விலை ஏறிவிட்டன. பிலிம் தயாரிப்பு விநியோகம் எல்லாம் அரசுத் துறையில் இருப்பதால் இந்த விலை ஏற்றத்தைக் கண்டிக்கவும் முடியவில்லை; இவர்கள் இல்லா விட்டால் வேறு ஒரு தனியார் கம்பெனி தயாரிப்பைப் பயன்படுத்தலாம் என்ற நிலையும் இல்லை.

தற்போது பிலிம், 125 சதம் விலை ஏறியுள்ளது. பணம் தந்தாலும் சரக்கு நன்றாய் இருக்கும் என்ற உறுதி இல்லை. பல சமயம் ஆயுசு போன பிலிம் கொடுத்து ஏமாற்றி விடுகிறார்கள். மேலே தேதி சரியாயிருந்தாலும் பிலிமை இருட்டு அறையில் கழுவினால் பல்லை இளிக்கிறது.

எங்களுக்குத் தேவையான 'ஸ்பீட்' உள்ள பிலிம் சுருளை வாங்க முடியவில்லை. எங்களுக்கு ஒரு வகை பிலிம் சுருள் வேண்டுமானால், அவர்கள் கொடுக்கும் பிலிம் சுருளையும் வாங்க வேண்டிய நிர்ப்பந்தம். அதாவது ஹோட்டலுக்குப் போய் இரண்டு இட்டிலிகள் சாப்பிட விரும்பினால் அவர்கள் கொடுக்கும் நான்கு வடைகள் சாப்பிட்டுத்தான் ஆகவேண்டும் என்பது போல உள்ளது.

இந்தியா சுதந்திரம் அடைந்து முப்பது வருடத்துக்கு மேல் ஆகின்றன. இன்னும் சொந்தமாகப் பிலிம் சுருள்களைத் தயாரிக்க நம்மால் இயலவில்லை. எக்ஸ்ரே படம் மட்டும்தான் தயாரிக்கிறார்கள். வெறும் 'கமிஷன் ஏஜண்ட்' போல மற்ற நாட்டு பிலிம் சுருள்களை வாங்கி விற்க பிலிம் தயாரிப்பாளர் என்று 'ரீல்' விடுவானேன்? இதற்கு ஏக முதலீடு செய்து அரசு நிறுவனமான இந்துஸ்தான் பிலிம்ஸ் எதற்கு?

தகவல்: உத்ரா பேட்டி: சித்தி





# எடுத்துச் சொன்னார் ஒருவர், ஏற்றுக் கொண்டார் மற்றவர், அடைந்தனர் இருவரும் லாபம், அதுவே நல்ல விவேகம்!

இருவரும்
இப்போது சேமிப்பில்
காட்டுகின்றனர்
வேகம்!

ஒருவர் மற்றவருடைய அனுபவத்திலிருந்து பயனடைவதே விவேகமான செயலாகும். இவ்விருவரும் சேமித்திட முடிவு செய்துள்ளனர், எனவே இவர் தம் குடும்பம் நல்வாழ்வு பெறுவது திண்ணம். பாங்க் ஆஃப் பரோடாவில் சேமிப்பு கணக்கு வைத்துள்ள இலட்சக்கணக்கான இல்லத்தரசிகளே இந்த விவேகத்தின் சான்றாக உள்ளனர். இயன்ற போதெல்லாம், இயன்ற அளவு இவர்கள் சேமித்துக் கொண்டிருப்பதன் மூலம், தங்கள் குடும்பம் செழிப்புடன் விளங்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளனர்.

பாங்க் ஆஃப் பரோடாவில், சேமிப்பு கணக்கு மட்டுமன்றி இன்னும் நல்ல பல திட்டங்கள் உண்டு. நீங்கள் நல்ல முறையில் சேமித்திட அவைகள் உதவுகின்றன.

நீங்களும் சேமிக்கத் தொடங்குங்கள்—நீங்களும் உங்கள் குடும்பமும் நல்வாழ்வு நோக்கி நடைபோடலாமே.

**சேமிப்பது ஒரு நல்ல பழக்கம்**

கீழ்க்கண்ட திட்டங்களில் உகந்ததைத் தேர்ந்தெடுங்கள்:

1. மந்த்லி இன்கம் பிளான்
2. ஃபிக்ஸட் டெபாஸிட் பிளான்
3. ரெகுலர் இன்கம் பிளான்
4. ரெக்கரிங் டெபாஸிட் ஸ்கீம்
5. ரெகுலர் இன்கம்-கம்-ரெக்கரிங் டெபாஸிட் பிளான்
6. ஃபெஸ்டிவல் டெபாஸிட் பிளான்

முழுமையான பாங்கிங் வசதிகளையும் சேவைகளையும் பெற, பாங்க் ஆஃப் பரோடா உங்களை முகமன் கூறி வரவேற்கிறது.



**பாங்க் ஆஃப் பரோடா**

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

ULKA-BOB-1/80 TAM




# அலகாபாத் நீதிமன்றத் தீர்ப்பு

ஜூன் 12, 1975.

வழக்கம் போல் மாருதி கார் தொழிற்சாலையிலிருந்து மதிய உணவுக்காக வீடு திரும்பிய சஞ்சய் வாசலில் ஒரே கும்பலாய் இருப்பதைக் கவனித்தார். என்ன நடந்திருக்கும் என்பதை அவரால் ஊகிக்க முடிந்தது. கடந்த சில நாட்களாகவே அலகாபாத் ஹைகோர்ட் ஜட்ஜ் ஜக்மோகன் லால் சின்ஹாவின் பிடிவாதப் போக்கைப் பற்றி வீட்டில் பேச்சு அடிபட்டது. 1971 தேர்தலில் இந்திரா காந்தி வெற்றியை எதிர்த்துத் தோற்றுப் போன ராஜ் நாராயண் வழக்குத் தொடர்ந்திருந்தார். நான்கு ஆண்டுகள் வழக்கு நடந்தது. பிரதமராயிற்றே என்று கொஞ்சமும் கரிசனம் காட்டாமல் சின்ஹா தேர்தல் செலவுகள் பற்றியும், அரசாங்கச் சிப்பந்திகளைத் தேர்தல் பிரசாரத்துக்குப் பயன்படுத்தியது பற்றியும் நுணுக்கமாக விசாரணை செய்தார். இந்திராவுக்கே சம்மன் அனுப்பி அவரைக் கூண்டில் ஏற்றி ஆறு மணி நேரம் வாக்கு மூலம், குறுக்கு விசாரணைக்குட்படச் செய்திருந்தார்.

அன்றைய தினம் அவருடைய தீர்ப்பு அறிவிக்கப்படுவதாக இருந்தது. தீர்ப்பு எதிராகப் போய்விட்டது என்று சஞ்சய் ஊகித்தது சரியாக இருந்தது. காரியதரிசி யஷ்பால் கபூரைத் தேர்தல் பிரசாரகராகப் பயன்படுத்தியதும், உள்ளூர் போலீஸ் அதிகாரிகளைக் கொண்டு தேர்தல் கூட்ட அமைப்புக்களைச் செய்வித்ததும் ருசுப்பிக்கப்பட்ட குற்றங்கள். இதனால் இந்திராவின் தேர்தல் செல்லாது. இன்னும் ஆறு ஆண்டுகளுக்குஅவர் தேர்தலில்போட்டியிடக்கூடாது என்ற அவரின் தீர்ப்பு இந்திய அரசியலில் அணுகுண்டாக வெடித்தது.

Prime Minister unseated என்று செய்திகள் பறந்தன. இந்திரா காந்தி உடனடியாகப் பிரதமர் பதவியிலிருந்து விலகியாக வேண்டும். நல்ல வேளையாக இந்திராவின் வக்கீலின் அவசரக் கோரிக்கையின் பேரில் ஜட்ஜ் சின்ஹா சுப்ரீம் கோர்ட்டில் அப்பீலுக்காக வேண்டி இருபது நாள் அவகாசம் தந்திருந்தார். அதுவரை இந்திரா பிரதமராக நீடிக்கலாம்.

காலை பத்து மணியிலிருந்தே மந்திரிகள், இந்திரா அபிமானிகள், பிரதமரின் வீட்டுக்கு வரத் தொடங்கினர். எல்லாரும் 'துக்கம்' விசாரிக்க வந்தவர்கள் போல் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

'ராஜிநாமாவைத் தவிர வேறு வழியில்லை போலிருக்கிறதே' என்று பிரதமரே ஆலோசனையைத் துவக்கினார். இதற்காகத்தான் காத்திருந்தவர்கள் போல மந்திரி பிரதானிகள், ''ஆமாம், வேறு வழியில்லை. ஆனால் சுப்ரீம் கோர்ட்டில் கட்டாயம் ஹைகோர்ட் தீர்ப்புத் தள்ளுபடியாகிவிடும். திரும்பவும் இன்னும் அதிகப் பெருமையுடன் பிரதமராகத் திரும்பலாம்'' என்று பலர் சொன்னார்கள். சித்தார்த்த சங்கர் ரேயும் சட்ட மந்திரி கோகலேயும் 'சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்தால் தற்காலிக தீர்ப்பு 20 நாட்களுக்குள் கிடைக்கும். அதுவரை பதவியில் நீடிக்கலாம்' என்றனர். அங்கேயிருந்த ஜகஜீவன்ராமும் சவானும் விளைவுகளைப் பார்த்துக் கொண்டு சும்மா இருந்தார்கள். இந்திரா அவர்களை ஆலோசனை கேட்டுப் பல மாதங்கள் ஆகிவிட்டன. அவருடைய நம்பிக்கை வட்டத்திலிருந்து இருவருமே தள்ளப்பட்டு விட்டனர். இந்திரா ராஜிநாமாச் செய்தால் பிரதமர் பதவிக்குப்

கி. கஸ்தூரி ரங்கன்

போட்டியிட்டுப் பார்க்கலாம் என்று இருவர் மனத்திலும் எண்ணம் ஓடியிருக்கக் கூடும்! ஆனால் வெளியே சொல்லவில்லை.

அன்றைய தினத்தில் இந்திராவின் அரசியல் நிலை படு பாதாளத்தில் விழுந்து விட்டதாகவே தோன்றியது. மாருதி கார், நகர்வாலா, மிச்ரா கொலை இவை சம்பந்தப்பட்ட பயங்கர வதந்திகள் இந்திராவின் பெருமையைப் பாதிக்க ஆரம்பித்துவிட்டன.

முந்தைய ஆண்டு பதிமூன்று ராஜ்யங்களில் மழை பொய்த்து விட்டதன் காரணமாகப் பரவலாகக் கடும் வறட்சி, பற்றாக் குறை. விலைவாசிகள் விஷம்போல் ஏறிக் கொண்டிருந்தன.

எதிர்க் கட்சிகள் ஒருமித்த தாக்குதலைத் தொடங்கியிருந்தனர் குஜராத்தில் கட்டாயத் தேர்தல் நடத்திக் காங்கிரஸ் கட்சியை விட அதிக இடங்கள் ஜனசங், சுதந்திரா, மொரார்ஜி காங்கிரஸ் முதலிய கட்சிகளின் கூட்டணி அதிக இடங்களைப் பெற்றுவிட்டன



ஸ்ரீரங்கத்தில் ரங்கநாதர் ஆலயத்தில் வாகனங்களுக்கும் நைவேத்தியங்கள் படைக்கப்படுகின்றனவாம். யானை வாகனத்துக்கு நிறை வாழைச் சோகை, கரும்பு முதலியனவும், குதிரை வாகனத்துக்கு கொள்ளும் நைவேதனம் செய்கிறார்களாம். ஸ்ரீ ரங்கநாதர் பள்ளி கொண்டிருக்கும் ஐந்து தலை நாகத்திற்கு (ஆதிசேஷன்) அர்த்த ஜாமத்தில் 'அரவணை' என்ற பாலிலேயே செய்யப் பட்ட சர்க்கரைப் பொங்கல் நைவேத்யம் செய்கிறார்கள், தினசரி! -லெம்லெஸ்பி

என்ற செய்தியும் அன்று காலையில்தான் வந்தது. ஜனதாக் கட்சியின் முன்னோடியாகக் குஜராத்தில் எதிர்க் கட்சிகளின் ஒத்துழைப்பு வெற்றிகரமாக அமைந்து விட்டது. பீஹாரில் ஜெ. பி. தலைமையில் ஆரம்பித்த 'புரட்சி' நாடெங்கிலும் பரவலாயிற்று. 'இந்திரா காந்தியே ஆட்சியை விட்டு வெளியேறு' என்ற கோஷங்கள் கேட்கலாயின. பெரும் பான்மையான பத்திரிகைகள் இந்திரா ஆட்சியைக் கடுமையாக விமர்சித்து எழுதிக் கொண்டிருந்தன.

இத்தருணத்தில் வந்த அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பு தளர்ந்துபோன கட்டடத்தின் அடிக்கல்லையே பிடுங்குவதாக இருந்தது.

இந்திரா காந்தி நீண்ட நேரம் தன் முடிவை ஒத்திப்போட விரும்பவில்லை. ராஜினாமா செய்வதாக அறிக்கை ஒன்றை எழுத ஆரம் பித்தார். அவருக்குப் பதில் யார் என்ற கேள்வி எழுந்தது. ஜகஜீவன்ராம் அல்லது ஸ்வரண் சிங் என்று யோசனை கூறப்பட்டது. தற்காலிகப் பிரதமராக இருக்க விருப்பம் உள்ளவர்கள்தாம் பதவி ஏற்க வேண்டும். அக்ராசனர் பருவாவை நியமிக்கலாம் என்று இன்னொரு கட்சி.

ஒன்றும் தோன்றாத குழப்ப நிலையே அங்கே நிலவியிருந்தது. அக்கட்டத்தில் சஞ்சய் காந்தி புயலாக உள்ளே நுழைந்தார்.

''மம்மி!'' என்று அழுகை வெடிக்கும் குரலில் அம்மாவைக் கட்டிக் கொண்டார்.

இந்திரா சஞ்சயை உள்ளே தனியாக அழைத்துச் சென்றார். சஞ்சயின் வருகை அவருக்குப் புதிய தெம்பை அளித்தது. ராஜீவையும் உடன் வைத்துக் கொண்டு ராஜினாமா செய்வது பற்றி மூவரும் ஆலோசித்தனர்.

சஞ்சய் தாயின் கையிலிருந்து காகிதத்தை வாங்கி முதலில் கிழித்துப் போட்டார்.

''ராஜினாமா செய்கிற யோசனையே வேண்டாம். அங்கே உள்ள ஒருத்தரும் நம்பக்கூடிய ஆளில்லை. குழியில் தள்ளிப் புதைத்து விட்டு மறு காரியம் பார்ப்பார்கள்'' என்றார்.

சுப்ரீம் கோர்ட் இடைக்காலத் தீர்ப்பு தரும்வரை பதவியிலேயே நீடிப்பது. இடையில் அலகாபாத் ஹைகோர்ட் தீர்ப்பை எதிர்த்துப் பொதுமக்களிடையே கிளர்ச்சி எழுப்புவது என்று முடிவாயிற்று.

''எல்லா ஏற்பாட்டையும் நானே பார்த்துக் கொள்கிறேன்'' என்று சஞ்சய் தைரியம் கூறினார்.

அதன் பிறகு நடந்தவை நம்ப முடியாத சாகசச் செயல்களாக இருந்தன.

முதலில் ஓர் அறிக்கை:

''இந்திரா காந்தி தொடர்ந்து பிரதமராக நீடிப்பார். நாட்டின் ஒற்றுமை, உறுதி நிலை, வளர்ச்சி யாவும் இந்திரா காந்தியின் மகத்தான தலைமையின் கீழ்தான் சாத்திய மாகும்.''

இந்த அறிக்கையில் எல்லா மந்திரிகளும், காங்கிரஸ்காரர்களும் கையெழுத்திட வேண்டும் என்ற கட்டளை பிறந்தது. யார் முதலில் போடுகிறார்களோ அவரே இந்திரா விசுவாசியாகக் கருதப்படுவார் என்ற செய்தியும் தரப்பட்டது.

கையெழுத்திடுவதற்குப் போட்டா போட்டி ஏற்பட்டது. யார் யார் போடவில்லை என்பதை சஞ்சய் ஊன்றிக் கவனித்து இந்திராவிடம் பட்டியல் தந்து கொண்டிருந்தார்.

அதன் பின் காலை, பகல், மாலை என்று இடை விடாமல் இந்திரா காந்தி வீட்டு முன் ஆதரவாளர்கள் கூடிக் கோஷம் எழுப்பினர். டாக்ஸி டிரைவர்கள், சைக்கிள் ரிக்ஷாக் காரர்கள், தொழிலாளிகள், என்று தரம் தரமாக ஆயிரம் ஆயிரம் நபர்கள் வந்து ''தேசத்தின் தலைவி இந்திரா காந்தியே!'' என்று கோஷம் எழுப்பிச் சென்றனர். ஒவ்வொரு கூட்டத்திலும் இந்திரா சில வார்த்தைகள் பேசினார்.

அநேகமாக வந்திருந்தவர்கள் அனைவருக்கும் லாரி அல்லது பஸ் வசதியும் உணவுப் பொட்டலமும் தரப்பட்டன. ராஜஸ்தான், ஹரியானா, உ. பி. முதலான அண்டை ராஜ்ய முதல்வர்களும் லாரி லாரியாக

கோஷிப்போர்களை அனுப்பி வைத்தனர். காங்கிரஸ் மாநிலத் தலைநகர்களிலும் இந்திரா ஆதரவுக் கூட்டங்கள் நடத்தப்பட்டன.

அலகாபாத் கோர்ட் தீர்ப்பை மறைமுகமாகவும் நேரடியாகவும் கண்டித்துக் காங்கிரஸ்காரர்கள் பேசினர்.

இந்தியா கேட் மைதானத்தில் பத்து லட்சம் பேர்களைத் தருவித்து மாபெரும் கூட்டம் நடந்தது. இதில் இந்திரா காந்தியுடன் சஞ்சய், ராஜீவ், அவரது மனைவி சோனியா, குழந்தைகள் உட்பட பிரதமர் குடும்பமே மேடையில் பிரசன்னமாகியிருந்தது. தன் குடும்பத்தின் தேச சேவை பற்றி எதிர்க் கட்சிகளின் சூழ்ச்சிகள் பற்றி, அயல் நாட்டுச் சதிகள் பற்றி இந்திரா பேசினார். கண்ணீர் விட்டார். தனக்கு ஆதரவாக இத்தனை பேர் திரண்டு வந்திருக்கிறீர்களே என்று ஆனந்தப்பட்டார்.

இக் கூட்டத்துக்காக மட்டும் 50 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டதாகப் பத்திரிகைகள் எழுதின. தூரத்து மாநிலங்களிலிருந்து காங்கிரஸ்காரர்கள் டிக்கட் இல்லாமலே ரயிலில் வந்தார்கள். அஸ்ஸாமிலிருந்து யாரும் வரவில்லையே என்று உள்ளூர் பெண்மணிகளை அஸ்ஸாமியர் போல வேஷம் போட்டு, தலையில் வட்டச் சக்கரக் கூடையை மாட்டி முதல் வரிசையில் உட்கார வைத்தனர்.

இக் கூட்டத்துக்குச் சில நாட்கள் முன் ஜெயப்பிரகாஷ் நாராயண் அதே இடத்தில் பெரிய கூட்டத்தை நடத்தினார். ராம்லீலா மைதானத்திலிருந்து ஊர்வலமாக வந்த சர்வ (எதிர்) கட்சித் தொண்டர்கள் ''இந்திரா காந்தியே வெளியேறு'' என்று கோஷம் எழுப்பினர். 'செல்லாக் காசுப் பிரதமர்' என்று வர்ணித்தனர்.

ஜெயப்பிரகாஷ் உடனடியாக இந்திராவை ராஜிநாமா செய்யச் சொன்னார். அரசியல், தேர்தல், கல்வி முதலிய துறைகளில் 'முழுமையான புரட்சி' கோரி 13 அம்ச கோரிக்கையைச் சமர்ப்பித்தார்.

இந்திரா ஆதரவுக் கூட்டத்தைத் தொடர்ந்து பார்லிமெண்டில் காங்கிரஸ் எம்.பி.க்களின் ஆதரவுக் கூட்டம் நடந்தது. இக்கூட்டத்தின் ஆரம்பத்தில் இரண்டு நிமிடம் கலந்துகொண்ட இந்திரா 'தனக்கான ஆதரவுக் கூட்டத்தில் பிரசன்னமாகத் தானே இருப்பது நன்றாக இருக்காது' என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டார்.

இந்திராவின் தலைமையில் நம்பிக்கை தெரிவித்துத் தீர்மானம் வாசிக்கப்பட்டது. ஜகஜீவன்ராம் முன்மொழிந்தார். சவான் வழிமொழிந்தபோது ''இந்திராவைப் பாதிப்பதெல்லாம் இந்தியாவையே பாதிக்கும்'' என்றார்.

அக்ராசனர் பருவா ஒரு படி மேலே போய் ''இந்திராவே இந்தியா'' என்று முழங்கினார்.

எதிர்பார்த்ததற்கு மேலாக கட்சியின் ஆதரவு இந்திராவுக்குக் கிடைத்துவிட்டது. சஞ்சய் காந்தியின் ஏற்பாடுகள் எல்லாம் அணு பிசகாமல் வெற்றிகரமாக நடந்தேறின. சுப்ரீம் கோர்ட் பாதகமாகத் தீர்ப்புச் சொல்லிவிட்டாலும் கூட இந்திரா பதவியை விட வேண்டியதில்லை என்பதற்கான திட்டங்கள் தீட்டப்பட்டன. சஞ்சய் காந்தி தற்காலிகமாக மாருதி காரை மறந்துவிட்டு வீட்டிலேயே பாசறை அமைத்துக்கொண்டு செயல்படத் தொடங்கினார்.

ஜூன் 23ந் தேதி சுப்ரீம் கோர்ட்டின் விடுமுறைக் கால நீதிபதி கிருஷ்ண ஐயர் பிரசித்தமாகிவிட்ட தன் தீர்ப்பை வழங்கினார். அதன் சாராம்சம்:

(1) இந்திராவின் அப்பீல் அனுமதிக்கப்பட்டு விட்டது.

(2) முடிவான தீர்ப்பு வெளியாகும்வரை அவர் பிரதமராக இருக்கலாம். ஆனால் பார்லிமெண்ட் அங்கத்தினருக்கான உரிமை எதுவும் கிடையாது. ஓட்டுப் போடக்கூடாது. சம்பளம் கிடையாது....

ஆகாசவாணியும் இந்திரா சார்புப் பத்திரிகைகளும் 'இந்திரா பிரதமராக நீடிக்கலாம். சுப்ரீம் கோர்ட்டின் 'சாதகமான' தீர்ப்பு' என்று அறிவித்தன. எதிர்க் கட்சிகளோ அத்தீர்ப்பு பிரதமர் பதவிக்கான அடிப்படையையே தகர்த்துவிட்டது என்று வாதிட்டன. இந்திரா எதிர்ப்பு இயக்கம் வலுத்தது. 'உடனடியாக ராஜிநாமாச் செய்யாவிட்டால் பெரும் கிளர்ச்சி நடக்கும்' என்று எச்சரிக்கை விட்டன.

ராம்லீலா மைதானத்தில் ஜூன் மாதம் 25ந் தேதி எதிர்க் கட்சிக் கூட்டம் ஏற்பாடாயிற்று. ஜெயப் பிரகாஷ் தலைமையுரை. இந்திராவின் பதவி மோகம், ஊழல் இவற்றைப் பற்றி விரிவாகப் பேசினார். போலீஸ்காரர்கள் முறைகெட்ட உத்தரவுகளுக்குப் பணியக் கூடாது என்று யோசனை சொன்னார். மாணவர்களை படிப்பை நிறுத்தச் சொல்லி முழுமைப் புரட்சிக்கான கிளர்ச்சியில் ஈடுபடச் சொன்னார். பின்னர் பேசிய எதிர்க் கட்சித் தலைவர்கள் இன்னும் ஆவேசமாக வார்த்தைகளை உதிர்த்தனர். சஞ்சய் காந்தியின் அடக்குமுறைத் திட்டத்தை நிறைவேற்றும் நாள் வந்துவிட்டது.

(தொடரும்)

---

''என் மச்சான் எனக்குத் திருட்டுத் தாலி கட்டிடுச்சு!''

''யாருக்கும் தெரியாமல் கல்யாணமா?''

''ஊஹும்! யார் கழுத்திலிருந்தோ தாலியைத் திருடி என் கழுத்திலே கட்டிடுச்சு!''





# 4

(சுக்ராச்சாரியார் மகள் தேவயானியை மணந்து கொண்டு, பிறகு அவளுக்குத் தெரியாமல் பணிப்பெண் சர்மிஷ்டையையும் மணக்கிறான் அரசன் யயாதி. விஷயமறிந்து கடுங்கோபம் கொள்ளும் தேவயானி யயாதியை விடுத்துத் தந்தை சுக்கிராச்சாரியாரிடம் திரும்பி விடுகிறாள். அவளை நாடி யயாதி மறுபடியும் போகும்போது சுக்கிராச்சாரியாரின் கோபத்திற்கு ஆளாவதோடு அவரால் 'நீ இப்போதே மூப்பை எய்துவாய்' என்று சபிக்கப்பட்டு வயோதிகனாகிறான். சாப விமோசனத்திற்காக சுக்கிராச்சாரியார் காலில் விழுந்து கெஞ்சுகிறான் யயாதி. 'ஓர் இளைஞன் உன் முதுமையை ஏற்றுக் கொள்ள முன் வருவானாகில் நீ பழைய ரூபத்தைப் பெறுவாய்!' என்று மனமிரங்கி சுக்கிராச்சாரியார் கூறுகிறார்.

ஒவ்வொரு மகனும் யயாதி யாசிக்க முதல் நான்கு மகன்களும் தந்தையின் வயோதிகத்தை ஏற்க மறுத்து விடுகின்றனர். இறுதியில் கடை மகன் புரு தந்தையின் முதுமையை ஏற்றுக் கொள்ள யயாதிக்குப் பழைய உருவம் திரும்புகிறது:

இது மகாபாரதத்தின் ஒரு கிளை அங்கம்.

இதனை அடிப்படையாகக் கொண்டு பிறந்ததுதான் இந்தக் கற்பனை சிறுகதை!)

சோகக் கடலில் ஆழ்ந்து கிடக்கும் உள்ளத்தைக் கரையேற்ற முயன்று தோல்வியைத் தழுவிக்கொண்டிருந்தான் இளவரசன் புரு.

அவனது விழிகளின் கடையோரங்களில் கண்ணீர்ப் பூக்கள் மெலிதாய்ப் பூத்தன.

அவனது அன்னை சர்மிஷ்டையின் வாக்கியங்கள் புருவின் காதுகளில் ரீங்காரமிட்டன.

''மகனே புரு! எனது பால்ய வயதில் சக தேவர் அடிக்கடி கூறுவார், கேட்டுக்கொள். ஆண்மகன் எப்போதும் கண்ணீர் சிந்தவே கூடாது. ஓர் ஆணின் கண்ணீர் சிந்தும் கோழை மனம் ஒரு நாட்டின் மிகப் பெரிய கேடு! தனிமனிதருக்கும் இது பெருத்த துன்பத்தைத் தரவல்லது. அன்று உன் பெரியன்னை தேவயானி வேலைக்காரியாக வந்த எனக்கு அநீதி இழைத்தபோது கண்ணீரை உள்ளடக்கி மனத்தைக் கல்லாக்கிக்கொண்டேன். எனது கண்களில் நீரை வரவழைக்க அவள் இழைத்த கொடுமைகள் எத்தனையோ.. சொல்லம்புகளும் இழி சொற்களும் எனது உள்ளத்தை ரணமாக்கி ஏற்படுத்திய தழும்புகள் கணக்கில் அடங்கா. அவை போர்த் தழும்புகள் போல் என் மனத்தில் என்றும் தங்கிவிட்டன. இன்று நான் நாட்டின் பட்டமகிஷி. ஆனாலும் என் உள்ளத்தில் பெருமகிழ்ச்சி என்பது இன்றும் கிடையாது. அம்மாதிரி சோகத்தையும் சுகத்தையும் சமமாக எடுத்துக்கொள்! நாம் துன்பம் என்றுஎண்ணுபவை யெல்லாம் துன்பமும் அல்ல. இன்பம் என்று எண்ணுபவையெல்லாம் இன்பமும் அல்ல. தற்கால உணர்வுகளை நிரந்தரமானவை என்று எண்ணி உள்ளத்தை இழந்து விடாதே மகனே!''



அன்னை சர்மிஷ்டையின் அறிவுரை நினைவுக்கு வந்ததும், 'தத்துவங்கள் போதிப்பதற்குத்தான் ஏற்றவை, என் உள்ளத்தில் இன்று அலைமோதும் வேதனை உணர்வுகளுக்கு இத் தத்துவங்கள் வழிகாட்ட முடியுமா என்ன?' என்று அவன் தனக்குள் கேட்டுக்கொண்டு மெதுவாக நடந்து தனது அறைக்குச் சென்று பஞ்சணையில் அமர்ந்து கொண்டான்.

'அபராஜிதா' — அவனையும் மீறிக்கொண்டு அவனது உதடுகள் அவள் பெயரைச் சற்று வெளிப்படையாகவே முணு முணுத்தன.

அவனது அன்புக் காதலி அபராஜிதா இன்று இல்லை.

அந்தஸ்து அவர்களது உறவில் ஓர் எல்லைச் சுவராய் நின்று அவர்களைப் பிரித்துவிட்டது. அவள் ஒரு சாதாரண விவசாயியின் மகளாம். அவனோ இளவரசனாம்! என்ன வேண்டிக் கிடக்கிறது இந்த அந்தஸ்து! அவனும் சாதாரண குடிமகனாகப் பிறந்திருந்தால் இந் நேரம் அபராஜிதாவுடன் இணைந்து ஓர் இனிமையான காதல் வாழ்க்கை வாழ்ந்திருக்க முடியுமே!

புருவின் நினைவுக் குதிரை பின்னோக்கிச் சென்றது.

அன்றொரு நாள்—

அந்தி மாலை நேரம். மான் வேட்டை நிகழ்த்திவிட்டுக் கானகத்தின் ஊடே குதிரையில் வந்து கொண்டிருந்த புரு, தாகம் மிகுதியால் ஒரு நதிக் கரையில் குதிரையை நிறுத்திவிட்டு நீர் அருந்த ஏகியபோதுதான் அக் காட்சி அவனது கண்களில் தைத்தது.

தண்ணீர் எடுக்க வந்த குடம் ஆற்றில் அடித்துச் செல்ல அதனை மீட்கச் சென்ற ஓர் எழில் நங்கை நீச்சல் தெரியாமல் ஆற்றில் அடித்துச் செல்வதைக் கண்டான் புரு.

ஒரு கணத்தில் மின்னலெனப் பாய்ந்து நீந்தி அவளது அண்மைக்குச் சென்று கருநாகம் போன்ற அவளது கேசத்தை உடும்புப் பிடியாய்ப் பிடித்து அவளை இழுத்துத் தன் தோளில் தாங்கியபடி நீந்திக் கரையை அடைந்தான். அபரிமிதமான நீரை உட்கொண்டிருந்ததால் மூச்சுத் திணற, கண்கள் சொருக, ஒரு வாடிய மலராய் இருந்த அப்பெண்ணைக் கரையில் கிடத்தி அவள் குடித்துவிட்டிருந்த நீரை வெளியேறச் செய்தான் புரு.

சிறிது சிறிதாக நினைவு திரும்பக் கண் விழித்த அந்த எழில் மங்கை மலங்க மலங்க விழித்தாள்.

தனது அழகை ஓர் அன்னிய ஆடவன் அளவெடுப்பதைக் கண்டு நாணத்தால் முகம் சிவக்க உடல் சிலிர்க்க எழுந்துகொண்டாள்.

''என்னைக் காப்பாற்றியதற்கு நன்றி. தாங்கள்...'' அவள் தனது யாழ் குரலில் வருடுவது போன்று வினவினாள்.

''புரு.''

''தாங்கள்... இளவரசர் புருவா....?'' கண்ணில் மரியாதையும் பயமும் பின்னவிட அவள் கேட்டாள்.

''ஆம் பெண்ணே! உன் பெயரைத் தெரிந்து கொள்ளலாமா?''

''அபராஜிதா...''

''ஆகா, இனிமையான பெயர்!''

அதுதான் முதல் சந்திப்பு.

மறுநாள் அதே நேரம். அதே ஆற்றங் கரை. அபராஜிதாவைச் சந்தித்துத் தன் காதலை வெளியிட்டான் புரு.

மருண்டுபோனுள் அவள்.

'ஒரு குடியானவப் பெண்ணுக்கும் இள வரசனுக்கும் திருமணம் என்பது நடவாத செயல் என்றும், தன்னை மறந்துவிடும்படியும் கூறினாலும், அபராஜிதாவின் உள்ளமும் தன் மேல் காதல் கொண்டுள்ளதை அறிக்கப் புருவுக்கு அதிக நேரம் பிடிக்கவில்லை.

மகாராஜாவும், தனது தந்தையுமான யயாதியே ஓர் அந்தணப் பெண்ணைக் காத லித்து மணந்து கொண்டவர் என்றும், அவர் தமது காதலுக்கு இடையூருக இருக்க மாட் டார் என்றும் புரு உறுதி அளிக்கவும் அப ராஜிதாவின் மனமும் இணங்கியது. பரு வங்களின் வளர்ச்சி போல் அவர்களது காதல் உறவும் பூத்துக் குலுங்கியது.

புருவின் பாட்டனுரான நகுஷனுக்கு, என்றோ அகஸ்திய முனிவர் ''உன் சந்ததியே மகிழ்ச்சி இழந்து போகக் கடவது'' என்று சபித்தது தனது வாழ்க்கையிலும் பாதிக்கப் போவதை புரு அறிந்திருக்கவில்லை.

புரு விஷயத்தைச் சொல்லாமலே அரசர் யயாதியின் காதுகளுக்கு அவனது காதல் பற்றிச் செய்திகள் வந்தன.

நீண்ட நேரம் சிந்தனை செய்தார் யயாதி.

அந்தணர் சுக்கிராச்சாரியாரின் மகள் தேவயானியையும், பிறகு சர்மிஷ்டையையும் மணந்து கொண்டதால் தமது வாழ்க்கை யில் நிம்மதியற்ற நிலையில் யயாதியின் உள்ளத்தில் ஒரு சங்கல்பம். தமது குமாரர் களுக்கு ராஜ வம்சத்திலிருந்துதான்பெண்கள் எடுத்துத் திருமணம் செய்விக்கவேண்டும்.

சாதுர்யமாக புருவின் காதல் விவகாரத் துக்கு ஒரு முடிவு கண்டார் யயாதி. புருவுக் குத் தெரியாமல் அபராஜிதாவையும் அவளது தந்தையையும் அரண்மனைக்கு வரவழைத் தார்.

ஒரு குடியானவப் பெண் அரச குமாரனை மணப்பதால் அரச குடும்பத்துக்கும் அப் பெண்ணை மணக்கும் அரச குமாரனுக்கும் வரவிருக்கும் இன்னல்களை விளக்கி புருவை மறந்துவிடும்படி அபராஜிதாவிடம் மன்றாடி யதும் அவள் அரசர் யயாதியின் கையில் சத்தியம் செய்து 'தான் இளவரசர் புருவை மறந்துவிடுவதாகக்' கண்ணீர் மல்கக் கூறி விடை பெறுகிருள்.

இதெல்லாம் புருவுக்குப் பிறகுதான் தெரிய வந்தது.

அரசர் யயாதிக்கு வாக்குக் கொடுத்த மறுநாள் எந்த நதிக் கரையில் அபராஜி தாவை முதலில் புரு சந்தித்தானே அங்கே அவள் உடல் ஒதுங்கிக் கிடந்தது.

சோகத்தை அடக்க முடியாமல் வெதும் பிப் போனுன் புரு.

'தனது வாழ்க்கையையும் முடித்துக்கொண் டால் என்ன?' என்றுகூட அவனுள் சிந்தனை.

'சீ... ஒரு வீரமிக்க அரச குடும்பத்தில் பிறந்துவிட்டுக் கோழை போல் தற்கொலை செய்து கொள்வதா' என்று அவ்வெண் ணத்தை மாற்றினுன்.

ஈடு செய்ய முடியாத இழப்பு ஏற்பட்டு விட்ட நிலையில் உள்ளத்தில் ஒரு துறவியாய் புரு வாழத் தொடங்கிய சமயத்தில்தான் அரசர் யயாதியின் வாழ்க்கைப் பாதையில் மாற்றங்கள் நிகழ்ந்தன.

மகள் தேவயானிக்குத் துரோகம் இழைத்த சர்மிஷ்டையை யயாதி மறுமணம் புரிந்து கொண்டதிலிருந்து யயாதியினிடம் கடுங் கோபம் கொண்டிருந்த சுக்ராச்சாரியார், யயாதி, தேவயானியைக் காணச் சென்ற போது, 'நீ மூப்படையக் கடவாய்' என்று சபித்துவிட்டார்.

அவரது கால்களில் விழுந்து யயாதி மன் னிப்புக் கேட்டதும், 'உன் மூப்பை ஓர் இளைஞன் ஏற்றுக் கொண்டால் உனது பழைய உருவம் திரும்பும்' என்று சாப விமோசனம் கூறி வழிகாட்டினுர். தன் முதுமையை மற்ற நான்கு மகன்களும் மறுத்த நிலையில் கடைசி மகன் புருவிடம் வந்து முதுமையை ஏற்க யாசித்தார் யயாதி.

புரு யோசித்தான்.

'அபராஜிதா போய்விட்ட நிலையில் எவ் வித இன்பங்களிலும், கேளிக்கைகளிலும் நாட்டமில்லா மனமும், பாழாகும் இளமை யும் கொண்டு வாழ்வதை விட தந்தையின் முதுமையை ஏற்று அவருக்கு அவரது பழைய உருவைப் பெற்றுத் தருவதால் அவரது சொந்த வாழ்க்கைக்கும், நாட்டுக்கும் ஒரு சேவை செய்தது போல் இருக்கும்.'

புருவின் முடிவை அறிய மறுநாள் அரசர் யயாதி வந்தார்.

''தந்தையே, தங்களது முதுமையை ஏற்றுத் தங்களுக்குப் பழைய உருவைப் பெற்றுத் தருவதை ஒரு பாக்யமாகவே கருதுகிறேன். இப்போதே தங்கள் முதுமையைத் தாருங் கள்'' என்று கண்ணீர் மல்கக் கூறினுன்.

அந்தக் கண்ணீரின் அடித்தளத்தில் பொதிந்து கிடந்த உள்ளம், 'அபராஜிதா! உன் மேல் நான் காதல் கொண்டதால் உன் மரணத்தின் முழுப் பொறுப்பும் என்னைத் தான் சாரும். அதற்கு இது எனக்கு சரி யான தண்டனை... நீ இல்லாமல் இனி எனக் கெதற்கு இளமை?' என்று கூறியது யயாதி யின் காதுகளுக்கு எட்டியிருக்க முடியாது.



சமீபத்தில் வர்தா (மகாராஷ்டிராம்) வில் சகுந்தலா என்ற பெண் மண மேடையிலிருந்து விருட்டென எழுந்து விட்டாள். வரப்போகும் கணவன் குடி போதையில் இருந்ததால் அவனை மணக்கமுடியாது என்று சொல்லிவிட்டாள் அவள். சிறிது நேரத்தில் சந்தோஷ்குமார் என்ற வாலிபர் சகுந்தலாவை மணக்க முன் வந்தார். அதே நாளில் அவர்கள் திருமணம் நடைபெற்றது அங்கே. -டைம்ஸ் ஆப் இந்தியா

-என். சந்திரசேகர்



# 'பிட்' பிடிக்கப் போய்...!

கு.கர.

தேர்வு நடக்கும் அறையில் பேயமைதி நிலவியது.

மேற்பார்வையாளர் சோமசுந்தரம் உலாத்தியபடியே ஒவ்வொரு மாணவனையும் தம் பைஃபோகல் லென்ஸ் வழியே துருவிச் சலித்தபடி இருந்தார்.

மூன்றாவது வரிசையில் எட்டாவதாக உட்கார்ந்திருக்கும் 8834 அடிக்கடி தன் போக்கினை வேவு பார்ப்பது போல் அவருக்குத் தோன்றியது. அவனது இடது பக்கத்துப் பாண்ட் பாக்கெட் வேறு கனமாகத் துருத்திக்கொண்டிருந்தது.

அவன் தன் பாண்ட் பாக்கெட்டில் இருக்கும் பிட்டை வெளிக் கொணரத்தான் தன்னை வேவு பார்ப்பதாக நினைத்தார் அவர். இல்லையானால் அவன் பார்வை ஏன் இப்படித் தன் பின்னாலேயே ஊர்வலம் வர வேண்டும்? என அவர் தம்மைத் தாமே கேட்டுக் கொண்டு சுறுசுறுப்பு அடையத் தொடங்கினார்.

அவனைப் பாராதது போல் அவனுக்குப் போக்குக் காட்டி 'பிட்ஸ்' வெளி வந்தவுடன் பட்டெனப் பிடிக்க வேண்டும் என முடிவு செய்தார் சோமசுந்தரம். முந்தின நாள் தேர்வின்போது அவருக்கு ஜூனியரான அருணாசலம் இரண்டு பேரைப் பிடித்து பிரின்ஸ்பால் முன் அவர் அங்கு உட்கார்ந்திருக்கும்போதே கொண்டு வந்து நிறுத்தி 'சபாஷ்' பெற்றதை நினைத்துப் பார்த்தபோது — வயிற்றெரிச்சலோடுதான் — அவர் சுறுசுறுப்பு மேலும் தீவிரமாயிற்று.

அறையில் ஒரு சுற்று வந்து எங்கோ பார்ப்பவர் போல் போக்குக் காட்டி மூன்றாம் வரிசையில் எட்டாவது நாற்காலிக்குப் பின்னால் வந்து நின்று 8834ஐ அவர் கண்காணிக்கலானார்.

தேர்வுக்கு வராதவர்களின் எண்களைக் குறிக்கக் கையில் பைலோடு கோவிந்தன் அப்போதுதான் ஆர்ப்பாட்டமாக அந்த அறையில் நுழைந்தான்.

8834ன் பாண்ட் பைக்குள் நுழைந்த கை, உடனே வெளியே வந்து விட்டது. மனத்துக்குள் சிவபூசையில் கரடியாக நுழைந்த கோவிந்தனைச் சபித்தபடி அவன் வெளியே போகும்வரை காத்திருந்தார் சோமசுந்தரம்.

ஒரு மணி நேரம் முடிவதற்கான மணி ஒலித்தது.

தேர்வு முடிய இன்னும் ஒரு மணி நேரமே பாக்கி உள்ளது. அதற்குள் பொறியில் எலி விழவேண்டுமே என்ற கவலையோடு மறுபடியும் அந்த அறையில் ஒரு சுற்று வந்தபின் களைப்படைந்தவரைப் போல் நான்காவது வரிசையில் காலியாக இருந்த ஒரு நாற்காலியை வேண்டுமென்றே ஆட்டிச் சத்தம் செய்தவராக அதில் உட்கார்ந்து கொண்டார் அவர்.

சற்று நேரத்துக்கெல்லாம் வங்கில் நுழையும் பெருச்சாளியைப் போல் 8834ன் இடது கை மீண்டும் பாண்ட் பாக்கெட்டுக்குள் நுழைந்தது.

சோமசுந்தரம் தாம் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அவன் கை அசைவதைத்தான் பார்க்க முடிந்தது. பிட்டோடு கை வெளியே வரட்டும் எனப் பொறுமையாகக் காத்திருந்தார் அவர்.

காகிதம் சரசரக்கும் மெல்லிய ஓசை!

எழுந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து 'லபக்' என 8834ன் இடது கையைப் பற்றிக்கொண்டார் அவர்.

''அதைக் கொடுத்துவிடு என்னிடம்'' என அவர் போட்ட அதட்டலில் பயந்துபோன 8834 ''சார் சார்! ஒண்ணுமில்லே சார்'' எனக் கூறியபடி எழுந்து நின்றான்.

''இந்தக் கெஞ்சல் எல்லாம் என்னிடம் வேண்டாம். கையில் இருப்பதைக் கொடு இப்படி'' எனக் கைநீட்டினார் சோமசுந்தரம்.

பாதி பிரித்த உறையோடு ஒரு காட்பரீஸ் சாக்லெட் அவர் கையில் விழுந்தது.

''நீங்களே சாப்பிடுங்க சார். இன்றைக்கு என் பிறந்த நாள். பரீட்சைக்குப் புறப்படும்போது எங்க அம்மா கொடுத்தார்கள்'' என்றான் 8834.

சோமசுந்தரத்தின் முகத்தில் அசடு வழிந்தது. சுற்றிலும் இருந்த மாணவர்கள் 'களுக்' சிரிப்பை உதிர்த்தார்கள்.

தான் 'பிட்' பிடிக்க ஆசைப்பட்டு மண் கவ்விய இந்தப் பிரதாபம் அருணாசலம் காதில் விழுந்தால் கல்லூரி முழுக்க எல்லோரிடமும் காது மூக்கு வைத்துக் கதையாகச் சொல்லிச் சொல்லிச் சிரிப்பாரே என்று நினைத்தபோது அவருக்கு 'பிட்ஸ்' வந்து தலையைச் சுற்றியது.



## சட்டமும் சமுதாயமும்

'முதல் மனைவி உயிருடன் இருக்கும் போதே அவரை விவாகரத்து செய்யாமலே தர்மேந்திரா ஹேமமாலினியைப் பகிரங்கமாக இரண்டாவது திருமணம் செய்து கொண்டிருக்கிறாரே! அரசு நடவடிக்கை எடுக்கமுடியாதா?' என்கிற ரீதியில் பாராளுமன்றத்தில் ஒரு உறுப்பினர் சமீபத்தில் கேள்வி எழுப்பினர்.

சென்னை பெண் வழக்கறிஞர் சங்கத்தின் பொருளாளரும் சிறந்த வழக்கறிஞரும் Notary Publicம்ஆன திருமதி ஆர். கமலா அவர்களைச் சந்தித்து இப்பிரச்னை குறித்து விவாதித்தபோது:



# ஹேமமாலினி தர்மேந்திரா திருமணம் சட்டப்படி செல்லுமா?



✽ திருமதி ஆர். கமலா

முதல் மனைவி உயிருடன் இருக்க, அவளை விவாகரத்துச் செய்யாத நிலையில் ஒருவன் இன்னொருத்தியை மணந்து கொண்டால், அத்திருமணம் செல்லாது என்பதோடு அவன் இந்தியன் பீனல் கோடின் 494வது ஷரத்துப்படி குற்றவாளி ஆகிறான். இதே போல் ஒரு பெண்ணும் இரு கணவர்களை மணம் செய்துகொள்வது குற்றமாகும். இரு தார குற்றம் செய்தவர்க்கு ஏழு ஆண்டுகள் வரை கடுங்காவலும் அபராதமும் விதிக்கச் சட்டம் இடம் கொடுக்கிறது.

ஆனால் ஒருவன் இரு தார குற்றம் செய்தான் என்ற வழக்கை அரசாங்கம் தானாகவே ஏற்று நடத்துவதற்குச் சட்டம் இடம் கொடுக்கவில்லை.

இரு தாரக் குற்றத்தால் பாதிக்கப்பட்ட முதல் மனைவியோ அல்லது அவள் சார்பாக அவளது அனுமதியுடன்தாய், தந்தை, சகோதரர் போன்றவர்களோதான் தவறு செய்த கணவன் மீது நீதி மன்றத்தில் வழக்குத் தொடர முடியும்.

இதனால் பல இரு தாரக் குற்றங்கள் நீதி மன்றத்துக்கே வராமல் போய்விடுகின்றன.

நமது பாரதப் பெண்களின் மனம் மலர் அனையது. கணவனைக் கூண்டில் ஏற்றி வழக்காட அவர்களது மனம் இடம் கொடுக்காததால் பல ஆண்கள் அதனைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

ஹிந்து திருமணச்சட்டப்படி அம்மி மிதித்து அருந்ததி பார்த்து, செய்துகொள்ளும் சம்பிரதாயத் திருமணமும், ரிஜிஸ்டர் திருமணமும், சட்ட ரீதியான திருமணங்கள். இவ்விரு விதங்களிலும் இல்லாமல் ஒரு பெண்ணை வேறு விதமாக மணந்த ஒருவன், இன்னொரு பெண்ணை இரண்டாவது முறையாக ரிஜிஸ்டர் திருமணம் செய்துகொண்டால் முதல் மனைவி கோர்ட்டுக்குப் போனாலும், முதல் திருமணம் செல்லாது என்றும், இரண்டாவது திருமணமே செல்லும் என்றும் தீர்ப்பு ஆகிவிடலாம்!

எனவே திருமணத்தை எளிமையாக நிகழ்த்தினாலும், சம்பிரதாய முறைப்படியோ அல்லது ரிஜிஸ்டர் திருமணமோ செய்து

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

'யுனெஸ்கோ' விஞல் நடத்தப்படும் பொது அறிவுப் போட்டியில் ஜெய்ப்பூரைச் சேர்ந்த ரகுவன்ஷ் லக்கேஹா என்ற மாணவன் (97 மதிப்பெண்களைப் பெற்று) முதல் மதிப்பெண் பெற்றுள்ளான். ஆதலால் அவன் யுனெஸ்கோவின் கல்வி மற்றும் கலாசார போர்டின் தலைவராக நியமிக்கப்பட்டுள்ளான்.

இம்மாணவன்தான் இப்பதவியை வகிக்கும் முதல் இந்தியனும், வயதிலே சிறியவனும் ஆவான். முந்தைய அதிக மதிப்பெண் ரிகார்டான 92 ஐ வகித்தவர்கள் ஒரு ரஷியனும், அமெரிக்கனும் ஆவார்கள்.

'தி அம்னெஸ்டி இண்டர்னேஷனல்' இச்சிறுவனை 1979-80க்கான சிறந்த மாணவனாகத் தேர்ந்தெடுத்துள்ளது.

— ஆதாரம் ''ஹிந்து''

— முரளீதரன்



கண்ணன்: ராமு காலமான பின் அவர் பிள்ளைகள் பாகம் பிரிவினை சமயம் 'எனக்கு வேண்டாம் வேண்டாம் நீயே எடுத்துக்கோ' என்று சொல்லியே சண்டை போட்டார்களாமே, ஆச்சர்யமா இருக்கே.

முரளி: ஆமாம் அவர்கள் பிரிச்சுக்கிட்டது அவர் விட்டுச் சென்ற கடன்களை அல்லவா?

- லலிதா செல்லப்பா

கொள்வது நல்லது. இதைப் பெண்கள் எல்லோரும் நன்கு உணர வேண்டும்.

ஓர் ஆண் தான் செய்துகொள்ளும் இரு மணம் சட்ட ரீதியானது அல்ல என்று அறிந்தும், மணக்கும் பெண்ணிடம் அது சட்ட ரீதியான திருமணமே என்று கூறி ஏமாற்றி இருப்பானானால் இக் குற்றத்துக்கும் தண்டனை உண்டு.

இரு தாரத் திருமணத்தில் பரிதாபத்துக்குரியவள் முதல் மனைவி மட்டுமல்ல; பல சமயம் இரண்டாவது மனைவியே அதிகமான அனுதாபத்துக்குரியவளாகிறாள். இரண்டாம் தாரம் சட்ட ரீதியான மனைவி அல்ல ஆதலால் அவளைக் கணவன் கைவிட்டு விடுவானேயாகில் சட்டப்படி அவளுக்கு எவ்விதமான உதவியும் கிடைக்காது. ஜீவனத்துக்குக்கூட அவள் கஷ்டப்படும் நிலை தோன்றலாம்! அவளை விட அவள் குழந்தைகள் பாடு தேவலாம்! ஏனெனில் அவளுக்கு சட்ட ரீதியான மனைவி என்ற அந்தஸ்து இல்லாவிடினும் இரண்டாவது மனைவிக்குப் பிறக்கும் குழந்தைகள், அவளை மணந்தவனின் சட்ட ரீதியான குழந்தைகளாகவே கருதப்படுவர். அவனது சுயார்ஜித சொத்தில் அவர்களுக்குச் சம பங்குண்டு.

முறைப்படி மணந்த முதல் மனைவி கணவனை விட்டு விலகிப் போய் வாழ்வாளேயானால் அப்பிரிவு ஏழாண்டுகளுக்கு மேல் நீடித்தால் ஒருவன் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளலாம். சட்ட பூர்வமான இரு மணமாக அது கருதப்படும். ஆனால் தனக்கு ஏற்கனவே மணமான விஷயத்தை அவன் இரண்டாவதாக மணப்பவளிடம் கட்டாயம் கூறியாக வேண்டும். அதை மறைத்து மணந்து கொண்டால் அவனுக்குப் பத்து வருடங்கள் வரை கடுங்காவல் தண்டனை விதிக்கச் சட்டம் இடம் கொடுக்கிறது.



நடிகர்களிலே அந்த நடிகர் ஒரு ''முடிசூடா மன்னர்!''

அப்படின்னு?

தனக்கு ''டோப்பா'' வெச்சிக் காத நடிகர்ன் னேன்!

வெ. சீதாராமன்

முஸ்லிம்களின் திருமணச் சட்டப்படி ஓர் ஆண் நான்கு பெண்கள் வரை மற்ற மூவரும் உயிருடன் இருக்கும்போதே அவர்களை விவாகரத்துச் செய்யாமலே மணந்துகொள்ளலாம். ஆனால் ஐந்தாவதாக மணந்து கொள்ள விரும்பினால் ஒருத்தியை விவாகரத்துச் செய்துவிட்டுத்தான் மணந்து கொள்ள முடியும்.

முஸ்லிம் திருமணச் சட்டம் அவர்களது மதச் சார்பான சட்டமாதலால் அதைப் பற்றிக் கூற நான் விரும்பவில்லை.

பெண்களுக்கு அநீதி இழைக்கப்படுவதைத் தடுக்க வேண்டுமானால் இரு தாரத் தடைச் சட்டத்தில் உடனடியாகச் சில திருத்தங்களை அரசு கொண்டு வர வேண்டும்.

இரண்டாவது திருமணம் நடந்த பிறகு, அதாவது தவறு நிகழ்ந்த பிறகு தண்டனை அபராதம் என்றெல்லாம் இருக்கிறதே தவிர தவறு நிகழ்வதற்கு முன் தடுப்பதற்கு எவ்வித வழியும் இல்லை.

பாதிக்கப்பட்ட பெண்தான் இக் குற்றம் புரிந்தவன் மேல் வழக்காட வேண்டும் என்ற நிலை மாறி அரசே குற்றம் புரிபவன் மேல் தானாக நடவடிக்கை எடுக்கும்படியாக சட்டம் திருத்தப்பட வேண்டும். ஒருவன் முதல் மனைவி இருக்க இரண்டாவதாக மணக்கிறான் என்று செய்தி வந்தால் அதைத் தடுத்து நிறுத்த சிவில் சட்டப்படி வழக்குப் போட வழிமுறைகள் ஏற்படுத்தப்பட வேண்டும். விஷயம் அறிந்ததும் போலீஸ் விரைந்து சென்று இத்தகைய திருமணத்தைத் தடுத்து நிறுத்தச் சட்டம் இடம் கொடுக்க வேண்டும். இக்குற்றத்துக்குத் தண்டனை கடுமையாக்கப்பட வேண்டும்.

சட்டம் கடுமையாக்கப்படுமானால் குழந்தையில்லாத ஒரு தம்பதி தங்களுக்குள் மனம் ஒப்பிக் குழந்தைக்காகக் கணவன் இரண்டாவது திருமணம் செய்து கொள்ளும் வாய்ப்பு இல்லாது போய்விடுமே என்று சிலர் கூறுவார்கள். இதை ஏற்பதற்கில்லை.

குழந்தை இல்லாதவர்கள் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாம். குழந்தைக்காக மட்டுமே மற்றொரு பெண்ணை இரண்டாம் தாரமாக மணக்கும் மனப் போக்கு மிகவும் கண்டிக்கத்தக்கது!

பேட்டி: ஸாயகன்

புகைப்படம்: மன்னை மூர்த்தி

பலமான எதிர்க் கட்சியின்றி எந்த அரசாங்கமும் பாதுகாப்புடன் இருக்க முடியாது.

செயல் திறனின்றி எந்தப் பொருளாதாரமும் செழிக்க முடியாது. —பென்ஜமின் டிஸ்ரேய்லி



✕ கருப்பையா

**ஜி. கே. சுப்பிரமணியன்** (அ.இ.அ.தி.மு.க.)
பவானிசாகர் தொகுதி

**எஸ்.**எஸ்.எல்.சி. வரை படித்த இவர், சிறந்த ஓவியர், நல்ல பாடகர் என்று பெயர் பெற்றவர். சில நாடகங்களில், திரைப் படங்களில் நடித்துள்ளார்.

''1967ம் ஆண்டு சட்டமன்றத் தேர்தலில் பேச்சாளராக அறிமுகமானார். திருப்பூரில் பிரசார இசை நிகழ்ச்சி செய்யச் சென்றபோது அதே காரணத்துக்காக வந்திருந்த பெண் மணியைக் காதலித்துத் திருமணம் செய்துகொண்டார்!



✕ ஏ. எம். சேதுராமன்

**ஏ. டி. கருப்பையா** (இந்திய கம்யூனிஸ்ட் கட்சி)
வால்பாறை தொகுதி

**போ**லீசாரின் தவறு காரணமாக இவர் சிறை வைக்கப் பட்டார். சிறையில் இருந்தபோது கம்யூனிஸ்ட் சித்தாந் தங்கள் மேல் தீவிர ஈடுபாடு உண்டாகிவிட்டது.

''மறைந்த தலைவர் தோழர் பி. கே. ராமசாமி என் வழி காட்டி. இதுவரை தொழிலாளி வர்க்கத்தினருக்காகப் பதி னொரு முறை சிறை சென்றுள்ளேன். என் பகுதியில் உள்ள தோட்டத்துத் தொழிலாளர்களின் சம்பள உயர்வு மற்றும் வசதிகளுக்காகப் பாடுபடுவேன்'' என்று கூறும் இவருக்கு சடு குடு விளையாட்டு என்றால் உயிர்.

# சட்டமன்றத்தில் புதுமுகங்கள்



✕ ராஜாம்பாள் வையாபுரி

**டி. ராஜாம்பாள் வையாபுரி** (இ. காங்கிரஸ்)
தலைவாசல் தொகுதி (ரிசர்வ்)

**கணவர்** வையாபுரி ஐக்கிய விவசாயிகள் சங்கத் தலைவர். கலப்புத் திருமணம்.

தேர்தலுக்கு முன் இந்திரா காந்தியைச் சந்தித்தது ராஜாம் பாள் வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவம்.

''என் அரசியல் வழிகாட்டியாகவும், குருவாகவும் எம். பி. சுப்பிரமணியத்தைக் கருதுகிறேன்'' என்று கூறும் இவருக்கு ஸ்கிப்பிங் ஆட்டத்தில் தீவிர ஈடுபாடு. விவசாயத்தில் களை எடுப்பது முதல் அனைத்திலும் நிபுணர்.



✕ பி. எஸ். துரைசாமி

**பி. எஸ். துரைசாமி** (அ.இ.அ.தி.மு.க.)
பர்கூர் தொகுதி

**''செ**ன்ற ஆண்டு மனைவி காலமானபோது அமைதியா யிருந்தேன். இப்போது தேர்தலில் வெற்றி பெற்ற போது தலைகால் தெரியாமல் குதிக்கவில்லை. அரசியல் பணிகளில் தீவிரமாக ஈடுபடுவதால் சமநிலை காக்க முடிகிறது'' என்கி றார். இவருக்கு டாக்டர் பட்டம் பெற்ற மகன் ஒருவர் இருக்கிறார்.



✕ ஜி. கே. சுப்பிரமணியன்

**ஏ. எம். சேதுராமன்** (அ.இ.அ.தி.மு.க.)
ஆர்க்காடு தொகுதி (வட ஆர்க்காடு)

**வி**யாபார விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் நெல், அரிசி வியாபாரத்தில் ஈடுபட் டார். தமது உழைப்பால் உயர்ந்து ஆர்க்காடு மக்களின் 'இனிய நண்பன்' ஆனார். ஆர்க்காடு நெல், அரிசி வியா பாரிகள் சங்கத் துணைச் செயலாளர். வட ஆர்க்காடு அரிசி ஆலை உரிமையாளர் சங்கத் துணைச்செயலாளராகவும் பதவி வகித்தவர்.

பேட்டி: ''சிக்கி''

## அத்தியாயம் 3

இருபதாவது வயதில் அம்மணி ஏமாந்து போனாள். பிளாட்பாரத்தில் செருப்பு ரிப்பேர் செய்கிறவனிலிருந்து பளபளக்கும் கடையில் துணி விற்கிறவன் வரையில் அவளை எத்தனையோ பேர் எவ்வளவோ தடவைகள் ஏமாற்றியிருக்கிறார்கள். அந்த ஏமாற்றங்களை நினைத்து நினைத்து அவள் என்றுமே மனம் வருந்தியதில்லை; புழுங்கியதில்லை. தனக்குச் சாமர்த்தியம் போதாது. அதனால் ஏமாந்து தான் தீர வேண்டும் என்று



சகித்துக் கொள்ளுவாள்.

ஒரு தடவை பர்மா பஜாரில் மாப்பொடியை யார்ட்லி பவுடர் என்று வாங்கினாள். பஜாரில் பார்க்கும்பொழுது முகமாவாக இருந்தது வீட்டுக்கு வந்ததும் குழம்புக்குக் கரைக்கக்கூட லாயக்கில்லாமல் போயிற்று. இருபத்திரண்டு ரூபாய் நஷ்டம். புத்திக் கொள்முதல் என்று கணக்கு எழுதினாள். சிரிப்புக்கூட வந்தது.

ஆனால் இருபதாவது வயதில் ஏமாந்தாளே அந்த ஏமாற்றம் ஒரு சகாப்தத்தையே முடிவு பெறச் செய்தது.

பதினைந்து வயதில் அவளுடைய பிஞ்சு நெஞ்சில் ஆசையை வளர்த்தவன் மோகன். அவள் பள்ளிக்கூடத்துக்குப் புறப்படுகிற போது அவன் கல்லூரிக்குப் புறப்படுவான். இருவரும் தெருக்கோடியில் சந்தித்துக்கொள்வார்கள். அப்புறம் அவனுடைய சைக்கிளில் அவள் அவனுடன் செல்லுவாள். எம். ஜி. ஆர். செய்த சீர்திருத்தம் அன்று இல்லை. சைக்கிளில் 'டபிள்ஸ்' போவது குற்றமாக இருந்தகாலம். போலீசுக்குப் பயந்து பயந்து பள்ளிவரை செல்லுவதே அவளுக்கு த்ரில்லாக இருக்கும்.

பதினைந்து வயதில் சைக்கிளில் டபிள்ஸ்.




# GH

**பி.வி.ஆர்**

பதினாறு வயதில் மாட்டினி காட்சிகள். அதுவும் 'டப்பா' படங்கள். இலவசச் சீட்டு கிடைத்தாலும் தூக்கி எறியக் கூடிய அளவுக்கு வெற்றிகரமாக ஓடிய படங்கள். சினிமாத் தியேட்டரில் அவன் அவளைத் தொடவேண்டிய இடங்களை யெல்லாம் தொட்டுப் பார்த்தான். ஆரம்பத்தில் வெறுப்பாக இருந்தாலும் அவள் போகப் போகச் சகித்துக் கொண்டாள்.

பதினேழு வயதில் அவள் பி.யூ. படிக்கையில் மோகன் பி.ஏ. மார்ச் – செப்டம்பர் எழுதி ஓய்ந்து விட்டான். ஒரு சீட்டுக் கம்பெனியில் பணம் வசூல் பண்ணும் வேலை. சம்பளம் என்ன என்று அவன் சொல்லவில்லை. அவளும் கேட்கவில்லை. தமிழக அரசில் ஒரு நடுத்தர அதிகாரியின் பிள்ளை வேலைக்குச் செல்லுகிறான் என்றால் அது நல்ல வேலையாகத்தான் இருக்க வேண்டும் என்று அவள் நினைத்துக் கொண்டாள். வாரத்தில் குறைந்தது மூன்று நாட்களாவது அம்மணியும் மோகனும் சந்தித்துக்கொண்டார்கள். சினிமாத் தியேட்டர் அலுக்கவே கிண்டி பூங்காவும் யாரும் சாதாரணமாக அண்டாத கடற்கரை ஓரங்களும் அடைக்கலங்களாயின. ஒரு நாள் மோகன் தன்னுடைய 'மிருக' ஆசையை வெளியிட்டான். எல்லாவற்றிலும் ஏமாறும் அம்மணி அதில் ஏமாறவில்லை. தாய்க்கு ஒரே பெண்ணான அவள் வாழ்க்கையில் ஒன்றை மட்டும் உறுதியாகக் கற்றிருந்தாள். ஒரு பெண் ஒரு தடவை கெட்டுப் போய்விட்டால் அவ்வளவுதான். அப்புறம் மீளவே முடியாது. பிராயச்சித்தமே இல்லை. ஆண் கெட்டுப்போனால் அது ரகசியமாக இருக்க முடியும். ஆனால் பெண் தன் நிலையை இழந்துவிட்டால் இழப்பு வெளிச்சம் போட்டுக் காட்டிவிடும்.

மோகன் தற்காலிகமாகத் தன் ஏமாற்றத்தைத் தாங்கிக் கொண்டான்.

பி.யூ.க்குப் பிறகு அம்மணி நர்ஸ் வேலைக்கான பயிற்சியில் சேர்ந்தாள். இது மோகனுக்குப் பிடிக்கவில்லை. தன் எதிர்கால மனைவி நர்ஸாகப் பணிபுரிவதை அவன் வெறுத்தான். நர்ஸ் என்றால் ஆஸ்பத்திரி. ஆஸ்பத்திரி என்றால் டாக்டர்கள், நோயாளிகள். ஒரு நாளுக்கு ஒரு நர்ஸ் எத்தனை முறைகள் எத்தனை ஆண்களின் உடல்களைத் தீண்டுவார்களோ? அவன் ஒரு முறை ஆஸ்பத்திரியில் படுத்திருந்தபோது தினமும் காலையில் ஓர் இளம் நர்ஸ் அவனுக்கு 'ஸ்பாஞ்ச் பாத்' கொடுப்பாள். அவளுடைய விரல்கள் மார்பிலும் முகத்திலும் கடமை நிமித்தமாகப் பட்டபோது அவனுக்கு இதமாக, சுகமாக இருந்தது. ஒரு தடவை ஒரு வெறியில் அந்த நர்ஸின் கையையே கட்டிப்பிடித்து அழுத்தினான். அந்த நர்ஸ் அனுபவம் வாய்ந்தவள். மௌனமாகப் போய்விட்டாள். மறுநாள் ஒரு வயது முதிர்ந்த நர்ஸை அனுப்பினாள். அவனுக்கு இதமும் சுகமும் ஒரு நர்ஸ் தந்தாள் என்றால், அம்மணி எத்தனை பேருக்கு அம்மாதிரியான சுகத்தையும் இதத்தையும் கொடுப்பாள்?

இந்த எண்ணம்தான் அவள் நர்ஸ் வேலைக்குப் போவதை வெறுக்க வைத்தது. ஆனால் அம்மணிக்கு வேறு வழி இல்லை. அப்பா இல்லை. அவர் யார் என்று அம்மா சொன்னதே இல்லை. அம்மா சின்ன வயசில் கதாநாயகியாக நடிக்க ஒரு பெரிய திட்டம் போட்டுச் சில ஆயிரம் ரூபாய் நகைகளுடன் பாலக்காட்டிலிருந்து சென்னை வந்தாள். வந்த இடத்தில் பல படப் பிரமுகர்களுடன் பேட்டி கிடைத்தது. ஒரு சில்க் ஜிப்பாக்காரன் தன் வீட்டிலேயே ஒரு தனி அறை கொடுத்து அவளுடைய மன உறுதியைச் சோதித்தான். அதில் அவள் தேறவில்லை. எப்பொருளை வாங்குவதாக இருந்தாலும் அதற்கு அச்சாரமாக ஏதாவது கொடுக்க வேண்டும், கோடம்பாக்கம் ஸ்டூடியோ விளக்கு முன் நிற்க

## நினைவிருக்கட்டும்!

1. காரியங்களில் மிகக் கடினமானது, நமக்கு மிக நன்றாகத் தெரிந்த ஒருவருக்குச் சிபாரிசுக் கடிதம் கொடுப்பது. - ''ஹப்பர்ட்''

2. செய்யாத வேலையினால்தான் களைப்பு வருகிறது. செய்த வேலையினால் களைப்பு வருவதில்லை. - ''பிரிஸ்ஹார்ட்''

3. ஒவ்வொரு மனித இதயத்திலும் ஒரு புலி, ஒரு பன்றி, ஒரு கழுதை, ஒரு குயில் இருக்கின்றன. அவை வெவ்வேறு மனிதனிடம், வெவ்வேறு விகிதாசாரத்தில் இயங்குவதால், மனிதனது தன்மை வெவ்வேறாக இருக்கிறது. ''பியர்ஸ்''

- கே. எம். இளங்கோ

---

அவனிடம் அவன் அச்சாரம் கேட்டான். அவளும் கொடுத்தாள். கொடுத்துக் கொண்டே இருந்தாள்.

கோடம்பாக்கம் ஸ்டுடியோவுக்கு வழி கிடைக்கவில்லை.

பிரசவ ஆஸ்பத்திரிக்கு வழி கிடைத்தது. சில்க் ஜிப்பாக்காரன் நல்லவன். வாங்கிய அச்சாரத்துக்குத் துரோகம் செய்ய நினைக்காதவன். அவனே எல்லா ஏற்பாடுகளையும் செய்து அம்மணியை வெளியே கொண்டு வந்தான்.

அதன் பிறகு ஒரு நாள் அவன் இறந்து போனான். சாலையில் தான் ஒருவன் மட்டுமே இருப்பதான நினைப்பு. அவனுடன் ஒத்துப் போகாத ஒரு டாக்ஸி சவால் விட்டு ஜெயித்தது.

சில்க் ஜிப்பாக்காரன் நல்லவன். நன்றி மறவாதவன்.

அம்மணியின் அம்மாவுக்கு இருபத்து மூவாயிரம் ரூபாய் கிடைத்தது.

அம்மணியின் அம்மா சென்னையே கதி என்றிருந்தாள். அவளால் பாலக்காட்டுக்குத் திரும்ப முடியாது. கல்பாத்தியில் அவளுடைய தாயார், சித்தி, அத்தை, அக்கா எல்லோரும் சாணிச் சட்டியும் துடைப்பமுமாகத் தயாராக இருப்பார்கள். கைக் குழந்தையுடன் செல்லுவது தப்பு இல்லை. ஆனால் கல்யாணமாகாமல் பெற்றதாயிற்றே?

ஒரு பள்ளிக்கூடத்தில் வேலை கிடைத்தது. நூற்று ஐம்பது ரூபாய் சம்பளம். தன்னுடைய நகைகள், ஜிப்பாக்காரன் அடுத்த ஜன்மத்துக்கும் சேர்த்து அச்சாரமாக அளித்த இருபத்து மூவாயிரம் எல்லாம் அவளைக் கஷ்ட ஜீவனத்துக்கு ஆளாக்கவில்லை.

பெண் வளர்ந்தாள்.

சிறுமி ஆனாள்.

பெரியவளானாள்.

மோகன் என்னும் தமிழக அரசு அதிகாரியின் பிள்ளைக்குக் காதலி ஆனாள்.

அவர்களுடைய காதலைக் கண்டு அம்மணியின் அம்மா பயந்தாள். தனக்கு நேர்ந்த கதி பெண்ணுக்கும் பரம்பரைச் சொத்தாக ஆகிவிடுமோ என்ற பீதியில் தூக்கம் வரவில்லை. ஒரு நாள் பிள்ளை வீட்டாரிடமே சரண் அடைந்தாள். பணமும் நகைகளும் பிள்ளையின் அம்மாவை ஈர்த்தன. அம்மணியை மனமார ஏற்றுக் கொண்டாள்.

அவ்வளவுதான். இன்னும் சில மாதங்களில் தன் பெண் அம்மணி ஒரு கௌரவமான குடும்பத்தில் குத்து விளக்கு ஏற்றப் போகிறாள் என்று பகிர்ந்தாள்.

அந்த மகிழ்ச்சியில் வாசலில் போகும் ஐஸ்கிரீமைச் சாப்பிட்டாள். ஐஸ்கிரீமில் ஐஸையும் கிரீமையும் தவிர வேறு இன்னமும் ஏதோ இருந்திருக்க வேண்டும்.

இரவு பேதி. மறுநாள் பேதியின் தம்பி வாந்தி. அன்று பிற்பகல் ஆஸ்பத்திரி. உடம்பில் தண்ணீர் பசை இல்லை. ஸலைன், குளுகோஸ் என்றெல்லாம் ஏற்றிப்பார்த்தார்கள்.

கடைசியில் ராயப்பேட்டை ஆஸ்பத்திரி ஒரு பாலக்காட்டுக்காரியைக் கைவிட்டது.

நர்ஸ் வேலைக்காகப் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கும் அம்மணி ஒரு தடவை 'ஓ'வென்று கதறிவிட்டு ஆகவேண்டியதைக் கவனித்தாள்.

உலகத்தில் இருந்த ஒரு பற்று – ஒரே பற்று– மங்களம் பாடியது.

இனிமேல் புதிதாக ஒரு பற்று ஏற்படுத்திக் கொள்ள வேண்டுமானால் அது மோகன் மூலமாகத்தான் முடியும்.

அவனை அவள் மனமார நம்பினாள். அவளுடைய நம்பிக்கையை நாளுக்கு நாள் உரமிட்டு வளர்க்கும் விதத்தில் மோகனும் நடந்து கொண்டான். பல நாட்கள் அவன் அவளுடைய வீட்டிலேயே குளித்தான், சாப்பிட்டான், தூங்கினான்.

அவனுடைய 'மிருக' ஆசை அடிக்கடி புற்றுப் பாம்பாகத் தலை நீட்டியது. அம்மணி மண்டையில் அடித்து அடக்கினாள். அவனும் அடங்கினான்.

ஒரு நாள் மோகன் தூங்கிக் கொண்டிருக்கையில் (அவன் ஏழரைக்கு முன் எழுந்து பழக்கப்படாதவன்) அவள் புறப்பட்டாள். பயிற்சி காலத்தில் அவள் ஹாஸ்டலிலேயே தங்க வேண்டும். வாரம் ஒரு முறைதான் வீட்டுக்கு வரலாம் என்று விதி. அம்மாதிரி வந்தவள் திரும்புவதற்கு முன் அறையை எட்டிப் பார்த்தாள். மோகனுடைய இளம் குறட்டை ஒலி காதுக்கு ரம்மியமாக இருந்தது. சிரிக்கும் ஒலியாகக் கேட்டது.

மறுவாரம் அவள் வந்தபோது அவன் இல்லை. ஆனால் அவன் சிரித்த சிரிப்பு பயங்கரமாகக் கேட்டது.



### அடிக்கடி...

புலவர் கீரன் விரிவுரை நிகழ்த்திக் கொண்டிருந்தார். திடீரென்று மின்சாரம் நின்று விட்டது. கொஞ்ச நேரம் கழித்து வந்தது. வந்த சில விநாடிகளில் போய்விட்டது. அதன் பிறகு வெகுநேரம் கழித்து வந்தது. பேச ஆரம்பித்த கீரன் வேடிக்கையாகச் சொன்னார்: ''வாழ்க்கையிலே அடிக்கடி தொல்லை தருவது இரண்டு. ஒன்று மின் சாரம், இன்னொன்று சம்சாரம்...'' தகவல் : எஸ். பாரதிநாதன்

# சொல் செயலாகிறது



கல்கியில் (8-6-80) வெளியான "வலி இல்லாத பிரசவம்" கட்டுரை படித்திருப்பீர்கள். அதில் எபிடியூரல் அனல்ஜீஸியா என்கின்ற வலி இல்லாத பிரசவ முறை பற்றி இங்கிலாந்தில் வாழும் இந்திய டாக்டர் எஸ். பாலகிருஷ்ணனும், சென்னை நாகமணி மருத்துவமனை அதிபரான டாக்டர் எஸ். ஞானசௌந்தரியும் சந்தித்துப் பேசினார்கள்.

28-7-80 அன்று நாகமணி மருத்துவமனையில், இந்த நவீன பிரசவ முறையை டாக்டர் பாலகிருஷ்ணன் கையாண்டு காட்டினார்.

திருமதி லலிதாவுக்குப் பிரசவ வலி மூன்று நிமிடத்திற்கு ஒரு தடவை ஏற்பட்டது. முதலில் அவர் வலியால் அவதிப் பட்டாலும் எபிடியூரல் முறையில் லிக்னோகேன் என்ற மருந்தைச் செலுத்த வலியை அறவே நீக்க முடிந்தது. சுமார் ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவருக்கு அறுவை சிகிச்சை மூலம் தான் குழந்தையை எடுக்க முடியும் என்று நிர்மானிக்கப்பட்டது. கொஞ்சமும் வலி இல்லாமல் ஓர் அழகான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். இதற்கு எபிடியூரல் ஊசி தவிர, வேறு எந்த மயக்க மருந்தும் கொடுக்கப்படவில்லை.

தாயும், சேயும், நலம். "ரிஷி"



## வலி இல்லாத பிரசவம்

மேஜை மேல் ஒரு குறிப்பு.

"ஸாரி அம்மணி... வேறு வழியில்லை. உன் நகைகளை, ஜெயிலா என்று பகுத்தறிவுப் போட்டியில் நான் பரிசு பெற வேண்டுமென்றும் என்ன செய்வது? நீ போலீசுக்குப் போனால் என்னை மீண்டும் உயிருடன் பார்க்க முடியாது. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நாம் சந்திப்போம். — மோகன்."

அம்மணி ஏமாந்து போனாள்.

பர்மா பஜாரும் ஒன்றுதான் மோகனும் ஒன்றுதான்.

• • •

நான்கு வருடங்கள் பறந்து போயிற்று. அல்லது நகர்ந்து சென்றதா என்று அம்மணி எண்ணிப் பார்க்கவில்லை. நர்ஸஸ் க்வார்ட்டர்ஸில் ஓர் இடம் அவளுக்கு என்றென்றும் உண்டு. அம்மாவின் நகைகள்தான் மோகனுக்குத் துணையாகப் போயிற்றே தவிர பணம் அப்படியே இருந்தது. நான்கு வருடங்களுக்கு முன் பாங்கில் கிட்டத்தட்ட இருபத்து ஐயாயிரம் இருந்தது. இப்போது முப்பதாயிரத்துக்கும் மேலே.

அவளுக்கு எதற்கு பணம்?

அம்மணி கண்ணாடி முன் நின்றாள். அவளுடைய தூய வெள்ளை உடையில் மனம் பெருமிதம் கண்டது. மொற மொற வென்றிருக்கும் யூனிஃபார்ம். தலையை அழுத்தி வாரி பன்னாக இறுகக் கட்டியிருந்தாள். அறையை விட்டு வெளியேறும் முன் வெள்ளைத் தலை அணியை அணிந்து கொள்ளுவாள்.

"ஹாய்!" என்ற குரல் கேட்டது.

அம்மணி கண்ணாடியிலிருந்து கண் எடுக்காமலேயே, "என்னடி?" என்றாள்.

லில்லி தாமஸ் கட்டிலின் மேல் ஒரு குதி குதித்து உட்கார்ந்து கொண்டாள்.

"எப்படி இருக்கான்?"

"யார்டி?"

"அதான் நீ பார்க்கிற முருங்கைக் கொம்பின் பிள்ளை?"

"சுத்தி வளைக்காமப் பேசுடி லில்லி."

"கோபிச்செட்டிபாளையம் மாப்பிள்ளை ராஜாமணியின் பிள்ளை பார்த்திபன்... விஜயன்.... தனஞ்செயன்... காண்டீபன்..."

"உனக்கு மகாபாரதம் தெரியும்னு பெயர்களைச் சொல்லிக் காட்டிக் கொள்ளாதே."

"ஓகே. எப்படி இருக்கான்? நேத்து உன்னுடன் என்ன டிஸ்கஸ் பண்ணினான்? அரசியலா, பிலாஸஃபியா, இல்லே செக்ஸா..."

"அவனுக்குப் பதிலா அவன் வந்திருக்கிற மாப்பிள்ளையைக் கவனிக்க."

"அவன்னு?"

"மல்லிகா!"

"அவர் பெண்ணு?"

"இல்லே."

"மருமகளா?"

"நோ."

"அப்போ?"

"ஒரே ஊர்."

"ஓகோ."

"அவனுடைய அப்பாவை அட்மிட் பண்ணியிருக்காங்க. அவரை அர்ஜுன் கவனிச்சுக்கறார். மாப்பிள்ளையை மல்லிகா..."

"ஓ! வருங்கால மாமனார்களை இப்பவே புரிஞ்சுக்கிறாங்களாக்கும்!"

"டோண்ட் பீ ஸில்லி."

"இப்ப என்னடி ஸில்லியா பேசிட்டேன். குங்குமம் இட்டுக்க மறந்துட்டே...."

"தாங்க்யூ.... உனக்கு ரொம்பவும் வல்கர் மைண்டுடி, லில்லி..."

"மத்த பெண்களை மாதிரி நாமும் குடும்பம் குழந்தைன்னு இருந்தா வல்கரா இருக்கிறதெல்லாம் இனிப்புக்களாயிருக்கும். மைண்ட் அதை நினைக்கப் பார்க்கறப்போ நாக்கு தானா ராகம் இசைக்கும்.... மைண்ட்லேந்து மியூஸிக் வெளியே போனப்புறம் அது ஒரு புழுதி அடைஞ்ச ரூம் மாதிரி ஆன பிறகு.."

"ஸ்டாப் யுவர் இடியாட்டிக் பிலாஸஃபி."

''தாங்க்ஸ்.''

''எதுக்குடி லில்லி?''

''நான் பேசறது பிலாஸபின்னு ஒத்துண்டியே!''

''நான் வரேண்டி.''

''ஈவினிங் ஆஃப்தானே?''

''ஆமாம். ஆனா நான் அவய்லபிள் இல்லே.''

''யாருடன் டேட்?''

''மல்லிகா.''

''ஐ ஸீ... அவளுடன் எங்கே போகப் போறே?''

''ராத்திரி வருவேன். அப்ப நீ தூங்கிண்டிருக்கலேன்னு சொல்றேன்.''

''தூங்கிண்டிருந்தாலும் எழுப்பிச் சொல்லு. அப்பத்தான் என் ட்ரீம்ஸ் ஸ்வீட்டாக இருக்கும்.... ஏண்டி அம்மணி முழிச்சுண்டிருக்கறப்போ எதுவுமே ஸ்வீட்டாக அமையலே. தூங்கறப்பவாவது ஸ்வீட் ட்ரீம்ஸ் இருக்கட்டுமே....''

''லில்லி!'' என்றான் அம்மணி.

''என்ன?''

''கலியாணம் பண்ணிக்கோள்.''

''மாப்பிள்ளை பார்த்து வைச்சிருக்கயா?''

''கிடைச்சா?''

''தயார். ஆனா டௌரி?''

''டௌரியா?''

''நீ என்ன நினைச்சே... கிறிஸ்டியன்னா பெண்ணுக்குச் செலவு இல்லாம கலியாணம் ஆயிடும்னு நினைச்சியா? உங்க பாப்பார ஜாதியிலே இருக்கிற நல்லதைக் கத்துகிறோமோ இல்லேயோ, அவலங்களையெல்லாம் டக் டக்குன்னு பிடிச்சிக்கிறோமாக்கும்... பி.ஏ.ன்னா பத்தாயிரம். பி.காம்னா பதினைஞ்சு. பி.இ.ன்னா அம்பது. பாட்டா ஷூ கம்பெனி மாதிரி ரேட் லிஸ்டே இருக்கு... போ உனக்கு டயமாறது. இந்த அட்டக் கரியில் மாரேஜைப் பத்தி வல்காரிட்டி இல்லாம ஒரு நாள் டிஸ்கஸ் பண்ணுவோம்.''

''நான் வரேன் லில்லி.''

''டாடா... சீரியோ... பை பை...''

அம்மணி நகர்ந்தாள்.

''இந்தா.''

''என்னடீ?''

''பத்து ரூபா கடன் வேணும். ஊருக்கு அனுப்பிச்சதிலே ஹாண்ட் பாக்கிலே காத்து ஊளையிடறது.''

''மேஜைடிராயர்லேந்து எடுத்துக்கோள்.''

''தாங்க்ஸ் அம்மணி. அப்பறம் இன்னும் ஒண்ணு.''

''என்னடி.... டயமாறது....''

''கார்டியாலஜி ப்ளாக்தானேடி.... நீ போனாத்தானே அங்கே இருக்கிறவ நிலீவ் ஆக முடியும்... அதுவும் அந்த பரப்பிரம்மம் கல்யாணி. இருபத்து நாலு மணி நேரம் வேணும்னாலும் காத்திருக்கும்....''

''சரிசரி என்ன விஷயம்?''

''அர்ஜுனன் உன்கிட்ட நிறையப் பேசறான் என்கிறே. மனம் விட்டுப் பேசறான்னு சொல்றே... தன் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட்டான்னும் சொன்னே... நீயும் சாப்பிட்டேன்னும் சொன்னே....''

''என்னடீது சொன்னே, சொன்னேன்னு.. கே. பி. எஸ். என்று நினைப்பா... என்ன... என்ன... என்ன.....''

''அவனை விடாதே. நல்ல ஆண்பிள்ளைங்க கிடைக்கிறது வரவரக் கஷ்டமாப் போயிண்டிருக்கு. அவனை இழுத்துப் போட்டு அவன் தலையை உன் மடியில் வைச்சுக்கோ....''

''பூ....பூ.... ஸ்டுபிட் ப்ரூட்!''

நடந்தாள். அம்மணி வெளியேறினள்.

கண் முன் அர்ஜுனன் வழிகாட்டி நடப்பதாகத் தோன்றியது. (தொடரும்)

---



## வேனில் கால அழகி

அட்டைப் படத்தில் காணப்படும் திருமதி சாவித்திரியின் சாமர்த்தியம் ஒரு வண்டி கொள்ளாது என்று சொன்னால் நீங்கள் நம்பித்தான் ஆகவேண்டும். ஸ்டெல்லா மேரி மகளிர் கல்லூரியில் படித்த இவருக்கு 1979ம் ஆண்டு ஸ்விஸ் பியூடி — மெடிமிக்ஸ் ஸ்தாபனத்தார் நடத்திய அழகுப் போட்டியில் முதல் பரிசு கிடைத்தது. போதாக் குறைக்கு ''மிட் சம்மர் குயின்'' என்ற அழகு ராணிப் பட்டமும் கிடைத்தது.

பரத நாட்டியத்தில் தீவிர ஈடுபாடு கொண்ட இவர் தாம் நடத்திய நிகழ்ச்சிகள் தவிர, தமது மகள் வந்தனாவுடன் ஆடிய நிகழ்ச்சிகளையும் பெருமையாகக் கூறுகிறார். நீச்சலில் இவர் நிபுணர். திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியத்தின் ஓய்வு நேர நண்பன் புத்தகங்களே. குறிப்பாக ஹெரால்டு ராபின்ஸ் எழுதியவை.

வண்ணப் படம் எடுத்தவர்:

**எம். கே. ராமமூர்த்தி**

**பேட்டி: சிக்கி**

# மந்திரமும் மொழியும்

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்



'கோவிலில் ஏன் ஸம்ஸ்கிருத மந்திரங்களைச் சொல்ல வேண்டும்? தமிழில் சொன்னால் என்ன?' என்று ஒரு கேள்வி ஸமீபத்தில் வந்ததல்லவா? அப்போது நன்றாகப் படித்த தமிழ்ப் புலவர்கள் இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு விளக்கிச் சொன்னார்கள். 'மந்திரங்களைப் பொறுத்த மட்டில் எந்த பாஷை என்று பார்ப்பது அடிப்படையிலேயே தப்பு. இங்கே பாஷை, அர்த்தம் எல்லாம் இரண்டாம் பக்ஷம்தான். சப்த மாத்திரத்தாலேயே ஏற்படுகிற பலன்கள்தான் மந்திரங்களுக்கு விசேஷம். வைதிகமான மந்திரங்களுக்கு இப்படி சப்தத்தினாலேயே கௌரவம், சக்தி இருக்கிறது என்று தொல்காப்பியரே சொல்லியிருக்கிறார்' என்று அவர்கள் எடுத்துக் காட்டினார்கள்.

தொல்காப்பியர், வேத சப்தங்கள் பரா என்கிற மூலத்தில் தோன்றியதால் முக்யத்வம் பெற்றவையாகும் என்று சொல்லி, ''இப்படிப்பட்ட அக்ஷரங்களைப் பற்றி இந்தத் தொல்காப்பியத்தில் நான் சொல்லப் போவதில்லை. இங்கே, ஸாதாரண மனிதர்களின் காதுகளுக்கு எட்டும் வைகரி சப்தங்களை மட்டும்தான் விவரிக்கப் போகிறேன். மற்றது, உள் விஷயமான மந்திராக்ஷரம், அந்தணர் மறைத்தே — அதாவது மறை என்கிற வேதத்தில் இருப்பது'' என்று 'எழுத்ததிகார'த்தில் (102ம் சூத்திரம்) சொல்லியிருப்பதாகவும், ஆதலால் ஆலயங்களில் மந்திர ஸப்தங்களை மாற்றாமல் ரக்ஷிப்பதற்குத் தொல்காப்பியமே ஆதரவாகத்தான் இருக்கிறது என்றும் எடுத்துக் காட்டினார்கள்.

எல்லா எழுத்தும் வெளிப்படக் கிளந்து
சொல்லிய பள்ளி எழுதரு வளியில்
பிறப்பொடு விடுவழி உறழ்ச்சி வாரத்து
அகத்தெழு வளியிசை அரில் தப நாடி
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே;
அஃ(து) இவண் நுவலாது எழுந்து புறத்
இசைக்கும்
மெய்தெரி வளியிசை அளவு நுவன்றிசினே.

(''எழுதரு வளி'' என்பது நாபியிலிருந்து எழுகிற உதானன் என்கிற மூச்சுக் காற்று. ''அகத்தெழு வளி'' என்பது மூலாதாரத்தில் எழும்புகிற பிராணக் காற்று.)

வெளியிலே மநுஷ்யர் காதுபடக் கேட்கிற 'வைகரி' என்ற சப்தத்துக்கு ஆதாரமாக உள்ளே 'பரா' என்ற சப்தம் இருக்கிறது. 'வைகரி' வாயில், உதட்டில் வருவது. 'பரா' என்ற மூல ரூபம்தான் மூலாதாரத்தில் நாபிக்குக் கீழே இருக்கிற சப்தம். அது வைகரியாக வாய் வழியே வருவதற்கு முன் பச்யந்தி, மத்யமா என்று இரண்டு நிலைகள் இருக்கின்றன. யோக ஸித்தியில் மேலே போகப் போகத்தான் படிப்படியாக பச்யந்தி மத்யமா, பரா முதலிய சப்தங்களைக் கேட்க முடியும். மூலாதாரத்தில் பரா வாக்காக எந்தெந்த சப்தங்கள் இருந்தால் அவை வைகரியாக எல்லா மநுஷ்யர்களும் வெளிப்படக் கேட்கக் கூடியவாறு வெளிவரும்போது அவற்றால் தேவதாப் ப்ரீதியும் லோக க்ஷேமமும், ஆத்மாபிவிருத்தியும் உண்டாகுமோ, அப்படிப்பட்ட பரா வாக்குகளையே ரிஷிகள் கிரஹித்து வேத மந்திரங்களாக நமக்குத் தந்திருக்கிறார்கள்.

உதானன் என்கிற மேல் நோக்கிப் போகிற மூச்சுக் காற்றினால்தான் மூலாதாரத்தில் சப்தங்கள் உண்டாகின்றன என்பது உட்பட மந்திர யோகம் தமிழின் முதல் நூலான தொல்காப்பியத்திலேயே சொல்லப் பட்டிருக்கிறது.

---

27-7-80 ஞாயிற்றுக்கிழமை மதியம் 12 மணிக்கு திருநெல்வேலி வானொலி நிலையத்தினரால் ஒலிபரப்பப்பட்ட ''நீங்கள் கேட்டவை'' நிகழ்ச்சியில் ''தள்ளுவண்டி மாடல் இது... தள்ளி விடுங்க...'' என்ற பாடல் ஒலிபரப்பி முடிந்தவுடன், அறிவிப்பாளர், ''தள்ளு வண்டியாளரும், நல்ல வண்டியாளரும் ''எரி பொருளை''ச் சிக்கனமாகச் செலவழியுங்கள். அது நாட்டிற்கும் உங்களுக்கும் நல்லது'' என்று கூறினார்.

- அ. வெங்கடேசன்



(''எழுதரு வளியில் பிறப்பு'' என்பது பரா, பச்யந்தி, மத்யமா என்ற மூன்றை. இவற்றை ''அரில்தப நாடி'' என்றால் ''பிழை யில்லாமல் ஆராய்ந்து'' என்று அர்த்தம். அந்தணர் இப்படி ஆராய்ந்து மறை தந்திருப்பதாகச் சொல்கிறார். காதுக்குக் கேட்காத இந்த சப்தங்களை விட்டு விட்டு, தாம் சொல்லப் போவதாகத் தொல்காப்பியர் கூறும் ''எழுந்து புறத் திசைக்கும் மெய் தெரி வளியிசை'' என்பதுதான் வாயில் எழும்பி, நம் காதில் கேட்டு அர்த்தத்தைக் கொடுக்கிற வைகரி.)

வேத ஸ்வரங்களைத் தூக்கியும், தாழ்த்தியும், ஸமனாகவும், ஸ்வர பேதமில்லாமலும் சொல்கிற ஸூக்ஷ்மங்களைக் கூடத் தெரிந்து கொண்டு இதை ''அளபிற் கோடல்'' என்று தொல்காப்பியர் சொல்கிறார்.

'நம் பாஷையில் ஒன்று இருந்தால்தான் உசத்தி; வேறெந்த பாஷையில் இருந்தாலும் மட்டம் அது வேண்டாம்' என்று நினைப்பது கொஞ்சம் கூடப் பகுத்தறிவும் இல்லை; யதார்த்த ஞானமும் இல்லை. ஒரு பக்கத்தில் நம்பிக்கையின் மீதே அநேக விஷயங்களை ஏற்க வேண்டிய ஆஸ்திகத்தைப் பரிஹாஸம் செய்து, 'பகுத்தறிவு, பகுத்தறிவு' என்கிறார்கள். இன்னொரு பக்கத்தில் இப்படி இருக்கிறது! ஒரு பக்கத்தில் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பதுதான் தமிழ் நாட்டின் தேசாசாரம் என்கிறோம். இன்னொரு பக்கம் ஆதி காலத்திலிருந்து இங்கு உறைந்து போய்விட்ட ஸநாதனமான ஸமாசாரங்களைக் கூட எப்படியாவது இல்லாமல் பண்ணிவிட்டால் தேவலை என்று நினைக்கிறோம்!

மந்திரங்களை நாம் விடுவதால் மந்திரங்களுக்கு ஒரு நஷ்டமும் இல்லை. நமக்குத்தான் நஷ்டம். மைஸூரிலிருந்து காவேரி வருகிறது. வெளி தேசத்திலிருந்து உயிரைக் காப்பாற்றக் கூடிய ஒரு மருந்து வருகிறது என்றால், 'அதெல்லாம்வேண்டாம்; உள்ளூர் ஜலம் கிடைத்தால்தான் குடிப்போம். உள்ளூர் மருந்தானால்தான் சாப்பிடுவோம்' என்று உயிரை விடுவார்களா? நமக்குப் பெரிய ரக்ஷையாக இருக்கிற மந்திரங்களில் பாஷையைக் கொண்டு வந்து, அந்நியம் என்று ஒதுக்குவது இப்படித்தான். வாஸ்தவத்தில் அது அந்நியமும் இல்லை. நம்மோடு அந்நியோந்நியமாக ஆதிகாலத்திலிருந்து கரைந்தது தான்.

## கல்கி நற்பணி மன்றம்

இந்த வாரம் நீங்கள், உங்கள் வசதி, தகுதிக்கு ஏற்பச் செய்த ஏதேனும் ஒரு நற்பணியைக் கீழே உள்ள கூப்பனில் சுருக்கமாக நாலு வரிகளில் எழுதுங்கள். கூப்பனை வெட்டி எடுத்து உறையிலிட்டு, **''கல்கி - நற்பணி மன்றம், தபால் பெட்டி எண் 3159, சென்னை- 600032** என்ற விலாசம் எழுதி, போதிய தபால் தலையொட்டித் தபாலில் சேர்த்துவிடுங்கள்.

பரிசுகள்: ஒருவருக்குத் தையல் உஷா மிஷின்; மேலும் 50 பேருக்கு ஆளுக்கு ரூ. 10/- இவர்களின் நற்பணிகள் கல்கியில் பிரசுரமாகும்.

உறையில் கூப்பனைத் தவிர வேறு எதுவும் வைக்கக் கூடாது.

ஆகஸ்டு மாதத்துக்கு முடிவு தேதி: செப்டம்பர் 22.

**கல்கி நற்பணி மன்றம்**

இவ்வாரம் (ஆகஸ்டு17–23)

நான் செய்த நற்பணி:

கையெழுத்து: தேதி: ______

பெயர்: ______

விலாசம்: ______



- ★ ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களால் மகத்தான அருளாசிகள் வழங்கப் பெற்ற படம்
- ★ கல்கி ஓவியர் வினு வரைந்த படம்
- ★ மக்கள் போற்றும் மெய்சிலிர்க்கும் படம்
- ★ கவலையைப் போக்கிக் கல்யாணத்தை நடத்தி வைக்கும் படம்
- ★ வியாபாரத்தை விருத்தி செய்யும் படம்
- ★ நினைத்த காரியத்தை நிறைவேற்றும் படம்



# ஸ்ரீ ஜயஹனுமான்

வண்ணப்படம்

(Copyright regd. A. 20286/78)

**ரூ. 9/- இன்றே அனுப்புங்கள்**

**உங்களுக்கு ஒரு படம் பூஜை முறைப்புத்தகத்துடன் அனுப்புகிறோம்**

உரிமையாளர் : **ஸ்ரீமதி சரஸ்வதி வெங்கட்ராமன்**
**w/o வினு (கல்கி)**
16, வேலாயுத முதலித் தெரு, நுங்கம்பாக்கம்,
சென்னை - 600 034 போன் : 89191
(வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாப் அருகில்)

---

உலகப் புகழ் பெற்ற ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் உணவுப்பொருள்கள்




(REGD.)

# ஊறுகாய்கள்

(PICKLES)

மாங்காய், ஆவக்காய், எலுமிச்சை,
வெங்காயம் மற்றும் மிக்சட் வெஜிடபிள்
முதலியன




(REGD.)

**SRI GANESHRAM & CO.,**
193, Thambu Chetty St., Madras - 600 001

---

எமது **திடீர் புளியோதரை பேஸ்ட்** உபயோகித்துப் பார்க்கவும்

---

செய்முறைகளை உருவாக்கி, தர — உயர்வை நிர்ணயிப்பவர்கள் :

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிடிக்கல் லாபரெட்டரீஸ், சென்னை-600 001**

உணவு, அதனைச் சார்ந்த உணவுப் பொருட்கள், எண்ணெய் வகைகள், பால் பண்ணைப் பொருட்கள், பேக்கரி பொருட்கள், பானங்கள், குளிர்ந்த பானங்கள், பழங்களினின்று தயாரிக்கும் பொருட்கள், உரம் மற்றும் கால்நடைத் தீவனங்கள், தண்ணீர், சோப்பு வகைகள் மற்றும் I.S.I. F.P.O. Agmark போன்ற தரக்கட்டுப் பாடுகள் உள்ள ஏனைய பொருட்களும் எமது லாபரட்டரியில் பரிசோதித்துத் தருகிறோம்.

---

**கவனிக்கவும்** எமது தயாரிப்புகளனைத்தும் 777 லேபில் பாக்கெட்டுகளில் மட்டுமே கிடைக்கும். உதிரி விற்பனை (Loose) செய்வது எமது தயாரிப்புகள் அல்ல என்பதை முக்கியமாக கவனிக்கவும்.

## அத்தியாயம் 55

# கடல் ராணியின் பயணம்

இயற்கை சற்றே கண்ணை விழித்து முந்திய இரவைக் கிழித்துவிட்ட அந்த பஞ்ச பஞ்ச உஷத்காலத்தில் சோலையில் இருந்தவர்களின் கண்ணெதிரே கடலலைகள் மண்ணைத் தழுவி நின்ற மணற்பரப்புக்கு அப்பால், சிந்து தூர்க்கத்துக்கும் பாண்டவகட்டுக்கும் இடையே இருந்த கடலின் ஆழத்தில் ஆடி நின்றது மிக அழகிய கப்பலொன்று. அதன் பக்கப் பலகையில் பெரிதாக எழுதப்பட்டிருந்த 'கடல் ராணி' என்ற வாசகத்தைக் கடலின் அலைகள் எழுந்து எழுந்து தழுவியது கூடப் பார்ப்பதற்கு மிகக் கவர்ச்சியாயிருந்தது.

மூடு பனிக்காலம் ஓரளவு நீங்கிவிட்டதன் காரணமாக லேசான பனித் திரைக்குள் அலைகளில் ஆடிநின்ற அந்தக் கப்பலின் உருவம் சிறிதளவு மயக்கத்தையும் அளித்தது பார்ப்பவர்களுக்கு. அத்தகைய ஒரு கப்பலை எப்படி காஸண்ட்ராவின் மாலுமிகளோ சிந்துதுர்க்கத்துக் காவலரோ அறியாமல் அந்த இடத்துக்கு லிவானியரால் கொண்டு வர முடிந்தது என்பதும் விளங்காத விந்தையாயிருந்ததால் அனைவரும் மேற்கொண்டு பேச நா எழாமல் பிரமை பிடித்து நின்றனர். எதையும் ஆராய்ச்சி செய்து முடிவுக்குத் துரிதமாக வரக்கூடிய இந்திரஜித் அனந்தின் மூளைகூட அந்த ஆரம்ப நிமிடங்களில் வேலை செய்ய மறுத்தது. கடல் ராணி, சாரு, அனந்த் ஆகியோரைச் சூழ்ந்துகொண்டிருந்த அஹமதின் அபிசீனிய வீரர்கள் லிவானியரின் சிரிப்பைக் கேட்டதுமே பழையபடி சோலை மரங்களில் மறைந்துவிட்டாலும், தங்களையும் அறியாமல் சோலைக்குள் வந்த லிவானியரையும், அவன் காட்டிய கப்பலையும்



கண்டு செயலிழந்து செய்வது இன்னதென்று அறியாமல் நின்றார்கள்.

இந்திரஜித் அனந்த் அந்த மரக்கலத்தை காணக் கிடைக்காத தங்கம் என்று குறிப்பிட்டது எத்தனை பொருத்தம் என்பதை, அதைக் குதூகலத்துடன் ஏற்றுக் கொண்ட கடல் ராணியும் உணர்ந்ததால் அவள் சற்று நகர்ந்து தனது உடல் அனந்தின் உடலோடு உராய நின்றாள். அவனது இன்னொரு பக்கத்தில் ஏற்கனவே உராய்ந்து கொண்டு நின்ற சாருவும் சற்று அதிகமாக இழைந்தாள். புதுவிதச் சேலையையோ ஆபரணத்தையோ பார்க்கும்போது ஏற்படும் உற்சாகத்தில் பெண்கள் மனம் தங்கள் இதய புருஷனை நாடுவது போல் அந்த இரு பெண்களின் இதய நெகிழ்ச்சி, கப்பலைக் கண்டதும் இந்திரஜித்திடம் அவர்கள் மனத்தை அதிகமாக ஈர்க்கச் செய்ததன் விளைவாக இருவரும் நன்றாக அவனை நெருங்கவே, அவன் கைகளும் அவர்களுக்குப் பின்னால் ஆதரவுடன் தவழ்ந்தன.

எல்லோரும் நிலைகுலைந்த நேரம் அது. சொப்பனத்தில் கூடச் செய்ய முடியாத அந்த அற்புதத்தை, லிவாஸியரின் அளவிட முடியாத துணிவை, கண்டு அச்சமும் ஆச்சரியமும் அனைவர் உள்ளத்தையும் அணைத்துக் கொண்ட நேரம் அது. இத்தகைய ஒரு பிரும்ம வித்தையை லிவாஸியர் எப்படிச் சாதித்தான்? காஸண்ட்ராவின் கண்ணிலும் சிந்துதுர்க்கக் காவலர் விழிகளிலும் எப்படி மண்ணைத் தூவினான்? என்று சோலையில் இருந்தவர்கள் தங்கள் உள்ளத்தில் கேள்விகளை எழுப்பிக்கொண்ட நேரம் அது. ஆனால் மனம் துள்ளியதால் ''லிவாஸியர்! ஈஸ் தேர் நோ லிமிட் டு யுவர் இம்புடென்ஸ்? (லிவாஸியர் உன் துடுக்குத்தனத்துக்கு எல்லையே இல்லையா?)'' என்று ஸில்வர் வினவினான் உணர்ச்சி பொங்கிய, பாராட்டு ஒலித்த குரலில்.

லிவாஸியர் தனது அழகிய கண்களை ஸில்வரை நோக்கித் திருப்பினான். ''நோ டேன்ஜர் ஈஸ் டு க்ரேட், டு ஸர்வ் த ப்யூடி ஆப் சிந்துதுர்க் (சிந்து துர்க்கத்தின் அழகிக்கு சேவை செய்ய எந்த அபாயமும் பெரிதல்ல)'' என்று சொன்னான் லேசாகச் சிரித்து.



அனந்தின் கண்கள் கப்பலை விட்டு லிவாஸியர் மீது நிலைத்தன. ''மிகவும் அழகிய பரிசு'' என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

''உன்னிடம் சிக்கியுள்ள அழகிக்கு, இவ்விரு அழகிகளுக்கு, இந்தக் கப்பல் எம்மாத்திரம்? தவிர இன்னொரு அற்புத அழகி இங்கிருப்பது தெரிந்திருந்தால் இன்னொரு கப்பலையும் பிடித்துக் கொண்டு வந்திருப்பேன்'' என்ற லிவாஸியர் இரு பெண்களையும் நோக்கித் தலையைச் சாய்த்தான் லேசாக.

''காஸண்ட்ரா விழித்தால் உன் நிலைமை இன்னும் சில விநாடிகளில் என்ன ஆகும் தெரியுமா?'' என்று ஸில்வர் வினவினான்.

''கேள்விக் குறிகளுக்கு எப்பொழுதும் அர்த்தமில்லை வீரர்கள் சம்பந்தப்பட்டவரையில். காஸண்ட்ரா விழித்திருந்தால் நான் வந்திருக்க முடியுமா? ஸித்தி அஹமதுக்கு கடற்போரில் பழக்கம் இருந்திருந்தால் அவன் கப்பல்களை நான் கொளுத்தியிருக்க முடியுமா? கடல் ராணி இங்கு வராதிருந்தால் இந்தக் கப்பலை அவரிடம் பரிசாகக் கொடுக்க முடியுமா? என் சிரிப்பைக் கேட்டதும் மறைந்துவிட்ட அஹமதின் புலிகள் மீண்டும் வளைத்துக் கொண்டால் என்ன செய்வது? இப்படிக் கேட்டுக் கொண்டே போகலாம்'' என்ற லிவாஸியர் அஹமத் மீது கண்களை நாட்டினான்.

அப்பொழுதுதான் அதிர்ச்சியிலிருந்து நீங்கிச் சுய உணர்வு வரப்பெற்ற அஹமத் தனது கைகளைத் தட்ட முயன்றான். அதைத் தனது செய்கையால் தடுத்த லிவாஸியர் ''அஹமத்! உன் மூளை ஏன் இவ்வளவு கட்டையாக இருக்கிறது? கடற் போரின் போதே மால்வானிகளையும் கொங்கணிகளையும் நீ பார்த்திருப்பாய். அவர்கள் எல்லோரும் கடல் ராணியில் இப்போதும் இருக்கிறார்கள். அவர்கள் இங்கு வந்தால் உன் கதி என்ன ஆகும்?'' என்று கேட்டதுடன் நில்லாமல், ''அட! நான் எதற்காக ஸில்வரைப் போல் கேள்வி கேட்கிறேன்? வந்தால் உன்னையும் உன் வீரர்களையும் சுட்டுத் தள்ளுவார்கள்'' என்று சிரித்துக் கொண்டு நிலைமையை விளக்கவும் செய்தான்.

அந்த சமயத்தில் இடைபுகுந்த இந்திரஜித் ''லிவாஸியர்! கடல் ராணி நீ அளிக்கும் பரிசைப் பார்க்க வேண்டாமா?'' என்று கேட்கவே, ''நிச்சயமாகப் பார்க்க வேண்டும். வாருங்கள் ராணி'' என்ற லிவாஸியர் ''நீங்கள்...'' என்று சாருவை நோக்கினான்.

''பெயர் சாரு. கடல் ராணியை விட அபாயமானவள்'' என்று அறிமுகப்படுத்தினான் அனந்த்.

''அழகுடன் ஆபத்து இணைந்துதான் நிற்கும்'' என்று பாராட்டிய லிவாஸியர் ''நீங்களும் வாருங்கள்'' என்று அழைத்து விட்டு முன்னே நடந்தான்.

அவன் போவதை ஒரு விநாடி பார்த்து விட்டு அவனைத் தொடர்ந்த அஹமத் பக்கத்

தில் வந்து கொண்டிருந்த வில்வரை நோக்கி ''இப்பொழுது நான் அவனைச் சுட்டால் என்ன செய்வான்?'' என்று வினவினன்.

''உன் துப்பாக்கி பெல்டிலிருந்து கிளம்பு முன் பிணமாகிவிடுவாய்'' என்றான் வில்வர்.

''நான் சுடப்போவது அவனுக்கு எப்படித் தெரியும்?''

''விவாஸியருக்கு முதுகிலும் கண் உண்டு. அவனும் அனந்தைப் போலத்தான்.''

''அனந்தும் அவனும் ஒரே மாதிரிதானா?''

''ஒரு வித்தியாசமுண்டு.''

''என்ன?''

''அனந்த் நல்லவன். கூடியவரையில் கொலை செய்யக் குறி வைக்க மாட்டான். ஆனால் விவாஸியர் அப்படியல்ல. கொலையைத் தவிர வேறு விதமாகக் குறிவைக்கத் தெரியாது அவனுக்கு. உன் அதிர்ஷ்டம் உன் விஷயத்தில் அப்படிச் செய்யவில்லை. கைத் துப்பாக்கியை மட்டும் சுட்டான்.''

இதைக் கேட்டதும் அஹமதின் உடம்பில் நடுக்கம் ஊடுருவிச் சென்றது. அதற்குப் பின் அவன் ஏதும் பேசாமல் நடந்தான். அவர்கள் கரையை அடைவதற்கு முன்பே கடல் ராணியிலிருந்து இரண்டு படகுகள் தரையை நோக்கி வந்து கொண்டிருந்தன. அவை கரையை அடைந்ததும் ஒரு படகில் கடல் ராணி, சாரு இவர்களுடன் அனந்த் ஏறிக்கொள்ள,வில்வருடன் விவாஸியர் வேறு ஒரு படகில் ஏறிக் கொண்டான். அஹமதும் அதில் ஏற முயலவே அவனைத் தடுத்த விவாஸியர் ''அதோ உன் படகு இருக்கிறதே அதில் ஏறிவா'' என்று கூறிவிட்டான்.

படகுகள் நகர்ந்தன. அஹமத் தன் படகில் ஏறாமல் கரையிலேயே நின்றான் போகும் படகுகளைப் பார்த்துக் கொண்டு. பிறகு திரும்பிச் சோலைக்குள் சென்று மறைந்தான். அவன் திரும்பிச் சென்றதைப் பார்த்த விவாஸியர் ''ஒரு உபத்திரவம் தீர்ந்து விட்டது'' என்று கூறினன்.

''அவனை ஏன் தப்ப விட்டாய்?'' என்று வில்வர் வினவினன்.

''அவனை அழைத்துச் சென்றால் கப்பலிலிருந்து மீண்டும் தரைக்கு அனுப்ப முடியாது. அதிலேயே இருந்தால் நான் சென்றதும் மால்வாணிகள் அவனைக் கொன்றுவிடுவார்கள்'' என்று பதில் சொன்னன் விவாஸியர்.

விவாஸியர் காட்டிய அனுதாபம் வில்வருக்கு விசித்திரமா யிருந்தாலும் அதைப் பற்றி அவன் ஏதும் கேட்கவில்லை. தன் தோளிலிருந்த கிளியைத் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்தான் தீவிர சிந்தனை வசப்பட்டு. ஆனால் கப்பலை அடைந்ததும், விவாஸியரின் காரணம் அவனுக்குப் புரிந்தது. கப்பலை அடைந்து நூலேணியில் ஏறித் தளத்தை அடைந்ததும் அங்கு பெரும்பாலும் மால்வாணிகளும், சில பிரஞ்சுக்காரரும், கொங்கணிகளும் இருந்ததைக் கவனித்தான் வில்வர். விவாஸியரைக் கண்டதும் அவர்கள் காட்டிய குதூகலத்திலிருந்து அவர்களுக்கு அவனிடம் சிறந்த பக்தி இருப்பதை உணர்ந்து கொண்ட வில்வர், ''இதில் ஏதோ மர்மம் இருக்கிறது'' என்று உள்ளூர சொல்லிக் கொண்டான்.

இந்த மர்மம் கடல் ராணி கப்பலில் காலை வைத்ததும் புரிந்தது வில்வருக்கு. தளத்தை அடைந்ததும் கடல் ராணியே வியப்பெய்தினள். அங்கிருந்த அத்தனை மால்வாணிகளும் அவளது மாலுமிகள். கொங்கணிகள் கனேஜியின் கடற் படையைச் சேர்ந்தவர்கள். ''இந்தக் கப்பலிலிருக்கும் இரண்டு லக்ஷம் மோஹராக்களைக் கொண்டு செல்ல கடல் ராணியின் தயவு வேண்டும் விவாஸியருக்கு. இல்லையேல் பெருவாரியாயிருக்கும் மால்வாணிகளும் கொங்கணிகளும் பிரெஞ்சுக்காரர்களை வெட்டிப் போட்டுக் கப்பலையும் சூறையாடிய பொருள்களையும் கடத்திச் சென்றுவிடுவார்கள். அதைத் தடுக்க ஏதோ ஆசை காட்டி இவர்களை இங்கு கொண்டு வந்திருக்கிறன்'' என்று மெள்ள மர்மத்தை அவிழ்க்கவும் முற்பட்டான் வில்வர். அவன் முடிவு சரியென்பதற்கு அடையாளமாகக் கடல் ராணியைக்கண்டதும் மால்வாணிகள் குதூகலக் கூவல் போட்டார்கள். அவர்களில் தலைவனாக இருந்தவன் ராணிக்குத் தலை வணங்கி,''உங்கள் அடிமை. உத்தரவுக்குக் காத்திருக்கிறேன்'' என்றான்.

கடல் ராணி வியப்புடன் அவனை நோக்கி, ''நீ எப்படி இந்தக் கப்பலுக்கு வந்தாய்?'' என்று வினவினள்.

''பிரெஞ்சுக் காப்டன் எங்களை வேலைக்கு அமர்த்தினர். இந்தக் கப்பலை உங்களுக்குப் பரிசாக அளிக்கப் போவதாகச் சொன்னர். நாங்கள் முதலில் நம்பவில்லை. பிறகு இதன் பக்கப் பலகையிலும் நடுப் பாய் மரச் சிலையிலும் உங்கள் பெயரை எழுதச் சொன்னர். வீத்திக் கப்பல்களைக் கொள்ளையிட்டதும் அவர் சொன்னபடி எங்களை இங்கு அழைத்து வந்தார்'' என்று விளக்கினன் மால்வாணி.

அதைக் கேட்ட ராணி மீண்டும் ஒரு கேள்வி கேட்டாள்: ''இதில் கொங்கணி மாலுமிகள் எப்படிச் சேர்ந்தார்கள்?'' என்று.

''நாங்கள் அமர்த்தினேம் காப்டன் சார்பில்'' என்றான் மால்வாணி.

இந்திரஜித் அனந்த் ஏதும் பேசவில்லை, ராணியையும் மேலும் பேசாதிருக்கக் கண்ணால் ஜாடை காட்டி விவாஸியருடன் சென்றான். ராணி மால்வாணியுடன் பேசிய போது விவாஸியர் அங்கு நிற்காமல் நடந்து நடுப் பாய்மரச் சிலையிடம் நின்றான் புன்முறுவலுடன். ராணி பேசிவிட்டு வந்ததும் எல்லோரையும் தனது அறைக்கு அழைத்துச் சென்றான்.

அறையில் நீண்ட மேஜையும் அதைச் சுற்றி நாற்

அவன் : கத்தி, பிளேடு, கண்ணாடித் துண்டு எல்லாம் விழுங்கற வித்தைக் காரனோட நீ நேத்துப் பந்தயம் கட்டி ஜெயிச்சட்டியாமே? என்ன செஞ்சே?

இவன் : நான் வழக்கமா இட்லி சாப்பிடற பாமா பவனத்திற்குக் கூட்டிட்டு போய் இரண்டு இட்லி வாங்கித் தந்தேன். முதல் வாய் விழுங்கும் போதே மனுஷன் தொண்டையிலே சிக்கி விழி பிதுங்கிட்டான். - கே. ஆர். எம்.







காலிகளும் போடப்பட்டிருந்தன. சிற்றுண்டி பரிமாறப் பிரெஞ்சு மாலுமிகள் தயாராக நின்றிருந்தனர். அவர்களைப் பார்த்தால் கொள்ளைக்காரர்களாகத் தெரியவில்லை. ஏதோ பெரிய மாளிகையில் பரிமாறுபவர்களைப் போல் கண்ணியமான வெண்மையான உடை அணிந்திருந்தார்கள். அவர்கள் ஏந்தி நின்ற பாத்திரங்கள் நல்ல வெள்ளியில் செய்யப்பட்டவை. மேஜை மீதிருந்த கோப்பைகளைத் தவிர பரிமாறும் சாதனங்கள் அனைத்தும் வெள்ளியால் செய்யப்பட்டிருந்ததால் லிவாஸியரின் படாடோப வாழ்க்கையை எல்லோரும் நன்றாக உணர முடிந்தது. ''இத்தனையும் கொள்ளையடித்த சாமான்களானாலும் அனுபவிக்க மனம் வேண்டுமே!'' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான் அனந்த்.

எல்லோரும் நாற்காலிகளில் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்துகையில் ராணி கேட்டாள், ''நீங்கள் கொள்ளையடித்து அனுபவிக்கிறீர்கள். இந்தப் பொருள்களை விற்றால் இன்னொரு கப்பல் வாங்கலாமே'' என்று.

''போதிய கப்பல்கள் என்னிடம் இருக்கின்றன'' என்ற லிவாஸியர் ''இந்தக் கப்பலை உங்களுக்கு மாலுமிகளுடன் கொடுக்கத் தீர்மானித்தேன். மால்வானுக்கு வடக்கே மலையைக் குடைந்து உட்புகுந்திருக்கும் கடலில் மறைந்து நிற்கும் உங்கள் கப்பல்களோடு இதுவும் சேர்ந்தால் உங்கள் கடற்படை மிகவும் வலுவடையும். இதில் எண்பது பீரங்கிகள் இருக்கின்றன. காஸண்ட்ராவின் பீரங்கிகளை விட நவீனமானவை. கடும் சக்தியும் குண்டு வீச்சின் எல்லையும் இவற்றுக்கு அதிகம்'' என்று விளக்கினான்.

இதைக் கேட்டதும் அனந்தின் புருவங்கள் சிந்தனையுடன் மேலெழுந்தன. கடல் ராணியின் கப்பல்கள் இருக்கும் மறைவிடத்தை இவன் எப்படி அறிந்தான் என்ற கேள்வி அவன் அகத்தே எழுந்தது. கடல் ராணிக்கும் அதே கருத்துத் தோன்றவே இருவர் கண்களும் சந்தித்தன ஒரு விநாடி.

வில்வர் முகத்தில் கடுமை உருவாயிற்று மெதுவாக. ''ராணி! உங்களிடம் எத்தனை கப்பல்கள் இருக்கின்றன? எத்தனை அருகில் இருக்கின்றன?'' என்று வினவினான்.

''இப்பொழுது என்னைக் கேட்க அவசியமில்லை. லிவாஸியரையே கேட்கலாம்'' என்றாள் ராணி.

அனந்தின் மனத்தில் ஏதோ சிந்தனை உதயமாயிற்று. அவன் கால் ராணியின் கால்களுடன் உராய்ந்தன மேஜைக்கு அடியில். இன்னொரு கால் சாருவின் ஆடையின் நுனியை இரண்டு விரல்களால் பற்றி இழுத்தது. அதிலிருந்து இரு பெண்களும் என்ன புரிந்து கொண்டார்களோ தெரியவில்லை. எழுந்து வெளியே செல்ல முற்பட்டனர்.

''ராணி! இந்த அறையை விட்டு அகலாதே. உன் சகாப்தம் இன்றுடன் முடிந்துவிட்டது. இப்பொழுது உன் தந்திரமும் புரிந்து விட்டது'' என்று கூறினான் வில்வர். அவன் பெல்டிலிருந்த இரு கைத்துப்பாக்கிகளும் சரேலென எழுந்து அனைவரையும் ஒரு சுற்றுச் சுற்றி எச்சரித்தன.

ஆனால் லிவாஸியரோ அனந்தோ எந்தவித உணர்ச்சியையும் காட்டவில்லை. ''வில்வர்! உயிரின் மேல் ஆசை இருக்கிறதா உனக்கு?'' என்று வினவினான் லிவாஸியர்.

''ஏன் கேட்கிறாய்?''

''இருந்தால் துப்பாக்கிகளை உறையில் போடு. ராணி வெளியே செல்லட்டும்.''

''உறையில் போடா விட்டால்?'' என்று கேள்வி எழுப்பிய வில்வரின் சொற்கள் சட்டென்று அவன் உதடுகளில் உறைந்துபோயின. அனந்தை நோக்கினான் ஒரு விநாடி. அவன் ஊகம் சரியென்பதை ஆமோதிக்கும் வகையில் அனந்த் தலையாட்டினான். அதைப் பார்த்த வில்வர் அறையை விட்டு வெளியே ஓடினான். கப்பல் நங்கூரமெடுத்து நகர்ந்துவிட்டதை உணர்ந்ததால் திகிலும் அடைந்தான். அந்தச் சமயத்தில் ராணி வெளியே வந்ததும் காஸண்ட்ரா தளத்திலிருந்த கொள்ளைக்கார மாலுமிகள் பெரிதாக ஆனந்தக் கூச்சல் போட்டார்கள். கடல் ராணியை நோக்கி டெய்லரும் இங்க்லண்டும் கைகளை ஆட்டினார்கள்.

''முட்டாள்களா! நாம் ஏமாற்றப்பட்டோம். புரியவில்லையா உங்களுக்கு?'' என்று இரைந்தான் வில்வர் காஸண்ட்ராவிலிருந்தவர்களை நோக்கி.

அவன் சொற்களைக் கடல் ராணியின் துடுப்புக்களின் ஓசை அடக்கி விட்டது. கடல் ராணியின் பாய்கள் விரித்து விடப் பட்டிருந்தன. நடுப் பாய்மரத்தில் சாய்ந்து கொண்ட லிவாஸியர் லேசாகச் சிரித்தான். கடல் ராணி கம்பீரமாகவும் வேகமாகவும் பாய்ந்து சென்றது அலைகடலில்.

(தொடரும்)



Dr. S. R. சிவராஜ்

# பாவிகளே ரட்சியுங்கள்

கடைசி பக்கம்

கண்ணதாசன்







துரத்தப்பட்டு ஓடிவந்த ஒரு விலைமகளுக்கு அடைக்கலம் கொடுத்தார் யேசு. 'பாவமே செய்யாதவர்கள் இவள் மீது முதற் கல்லை வீசுங்கள்' என்றார். இது நாடறிந்த கதை தான்.

வாழ்க்கையில் ஒரு பாவமும் செய்யாதவர் யார்? குறைந்தபட்சம் ஒரு மனிதன் பத்து எறும்புகள், பூச்சிகளையாவது மிதித்துக் கொன்றிருக்கிறான். பாவத்தின் அளவு முன் பின்னாக இருக்கலாமே தவிர எல்லோருமே ஓரளவு பாவம் செய்திருக்கிறோம். சிலரோ பாவத்திலேயே தங்கள் வாழ்க்கையை ஸ்தாபித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அநியாய வட்டி வாங்குகிறவன், கள்ள வாணிகன், சோரம் போகும் குலமகள், அதிகார துஷ்பிரயோகம் செய்பவன் — பங்கிடு செய்து பார்த்தால் பாதிக்கு மேற்பட்ட ஜனத்தொகை பாவத்திலேயே வாழ்ந்து கொண்டிருக்கிறது.

அதனால்தான் உலகத்தில் சமயங்களும், சமய உபந்நியாசிகளும் அவசியத் தேவையாகிவிட்டனர். திருந்தாதவனுக்கும் சொல்லித் தீரவேண்டிய ஒரு நிர்ப்பந்தம்; ஊதுகிற சங்கை ஊதி வைக்கலாமே என்ற ஆசை!

உலகம் இரண்டு கூறாகி விட்டது. ஒழுங்காக நட என்று சொல்வதற்கு ஒரு கூட்டம், ஒழுங்காக நடப்பதில்லை என்று முடிவுசெய்து கொண்டுவிட்ட மறு கூட்டம்! ஒரு பக்கம் பள்ளி, ஒரு பக்கம் குற்றவாளிகள். ஒரு பக்கம் நீதிபதிகள், ஒருபக்கம் திருடர்கள். ஒரு பக்கம் மேல் மக்கள், ஒரு பக்கம் இழி மக்கள்.

சில புற்றுகளில் மட்டுமே கரையான்கள் இருக்கின்றன. பெரும்பாலான புற்றுக்களில் பாம்புகளே இருக்கின்றன. இந்தப் பாம்புகள் அப்பாவிகளான வழிப்போக்கர்களைக் கடித்து விடுகின்றன. இந்தப் பாம்புகளைப் பற்றிய பீதியிலேயே மனிதன் வாழ வேண்டியிருக்கிறது.

பிள்ளை பிடிப்பவன், கற்பழிப்பவன் என்றெல்லாம் அன்றாடச் செய்திகள். இந்தப் பாவிகள் இந்தியாவில் மட்டுமல்ல; ஐரோப்பாவில் அதிகமாயிருக்கிறார்களாம்!

பெர்லினில் ஒருவர் போய்க் கொண்டிருந்தாராம். 'வாருங்கள் பீர் சாப்பிடலாம்' என்று ஒரு பெண் அழைத்தாளாம். 'ஓஹோ! இந்தியர் என்பதால் நமக்கு மரியாதை போகிறது' என்று நண்பர் நினைத்தாராம்! ஒரு பீர் ஒரு முத்தம்! இந்திய ரூபாயில் ஆயிரம் ரூபாய்க்கு இணையான 'மார்க்'குகளை அவள் பறித்து விட்டாள்!

தென் கிழக்கு ஆசியாவில் இந்த ஏமாற்று வேலைகள் குறைவு. சிங்கப்பூர் போன்ற சிறிய நாடுகளில் ஆயிரத்தில் ஒன்றிரண்டு இருக்கும். ஐரோப்பாவோடு ஒப்பிடும்போது இந்தியா எவ்வளவோ தேவலை!

காரணம்: மதங்களும், அதன் பிரச்சாரகர்களுமே!

மத நம்பிக்கை அதிகரிக்க அதிகரிக்க மனிதனின் திருட்டுப் புத்தி தெளிந்து குறைந்து விடுகிறது. கடவுளைப் பற்றிய உணர்ச்சியும், மரணத்தைப் பற்றிய நினைப்பும், மறுபிறப்பைப் பற்றிய தோற்றமும், பாவ புண்ணியம் பற்றிய விளக்கமும், பயங்கரப் பாவிகளை மாற்றி அமைத்திருக்கின்றன.

இருபத்தி எட்டு ஆண்டுகளுக்கு முன் சேலத்தில் விபசாரத் தொழில் நடத்திக் கொண்டிருந்தாள் ஒரு இளம் பெண். இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் அவளைச் சந்தித்தபோது தினசரி ஏதாவது சமயச் சொற்பொழிவுகளைக் கேட்கப் போய்க் கொண்டிருந்தாள். அதுகூட எனக்கு ஆச்சரியமில்லை. அவள் ஒருவனை மணந்து மூன்று பெண் குழந்தைகளைப் பெற்று, மூன்றையும் படிக்க வைத்து, இப்போது பம்பாயில் வசதியாக — மதிக்கத்தக்க குலமகளாக விளங்கிக் கொண்டிருக்கிறாள்.

அறியாமல் பாவம் செய்திருக்கலாம். ஆனால் பாவமே தீவிரமாகி விடக்கூடாது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் சிறைச்சாலையில் இருந்து திரும்பிய ஒரு திருடன் தன் கதை முழுவதையும் என்னிடம் சொன்னான். அது பற்றி எனது 'தென்றல்' முதற் பக்கத்தில் நான் எழுதியிருந்தேன். பிறகு போலீசார் அவனை நிழல் போலத் தொடருவதை நிறுத்தினார்கள். இப்போது சென்னையிலேயே ஒரு பெரிய மர வேலைக் கடை வைத்துக் கௌரவமாக வாழ்கிறார்.

தண்டிக்கப்படுவதால் மட்டுமே பாவிகள் திருந்துவதில்லை. போதனைகளாலேயே மீட்சி பெறுகிறார்கள்.

நமது சிறைச்சாலைகளில் மாலை ஆறு மணிக்கே கைதிகளைப் பூட்டுவதை விடுத்து, ஆறு மணியிலிருந்து எட்டு மணி வரை சமயச் சொற்பொழிவுகள் வைத்தால், புராணப் படங்களைப் போட்டுக் காட்டினால் கைதிகள் மட்டுமல்ல, வார்டர்களும் திருந்துவார்கள்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone; 431543) Editor; K. Rajendran

தலைவலி
போயேவிட்டது

Saridon

ஒரே ஒரு

**ஸாரிடான்** மூலம்

ட்ரேட்மார்க் 'ரோஷ்'

வலிமையானது

பாதுகாப்பானது

ஒன்றே ஒன்று போதுமானது




RP. 5977

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# செலக்ஷனே, செலக்ஷன்!

புத்திசாலியான அந்தப் பெண்
சாரதா'ஸ் பட்டுப் புடவையில் தன் அழகை
கண்டு மயங்கிய வரனின் முகத்தைப் பார்த்ததுமே
தீர்மானித்து விட்டாள் தன் திருமணத்திற்கு வேண்டிய எல்லா
பட்டுப் புடவைகளையும்
சாரதா'ஸிலேயே செலக்ட்
செய்ய வேண்டும் என்று.

